க்ரைம்
நாவல்

ரூ. 20 290



# நில்... கவனி... காத்திரு!

ராஜேஷ்குமார்

# நில்...! கவனி...! காத்திரு..!



## ராஜேஷ்குமார்

செல்போன், பேஸ்புக், ட்விட்டர், இண்ட்டர்நெட் என்று ஐ.டி தொழில்நுட்ப வளர்ச்சி விஸ்வரூபம் எடுத்து நாள்தோறும் படுவேகமாக முன்னேறிக் கொண்டிருந்தாலும், அதை முடக்கிப் போடும் வகையில் ஒருபக்கம் தொழில் நுட்பக் குற்றங்கள் ஈசல்கள் போல் படையெடுத்து வருகின்றன. ஒரு தொழில் நுட்பம் எவ்வளவு புத்திசாலித்தனத்தோடு இருந்தாலும் அதை ஏமாற்றும் வகையில் மாற்று தொழில் நுட்பத்தையும் சைபர் க்ரைம் குற்றவாளிகள் உருவாக்கி விடுகின்றனர். சைபர் க்ரைம் குற்றங்கள் பெரும்பாலும் பெண்களைக் குறிவைத்தே நடத்தப்படுகின்றன. எப்படி என்பதை இரண்டாவது அத்தியாயத்தில் இருந்து பார்ப்போம்.



பெரிதாய் மழை பெய்யும் சாத்தியத்தில் இருந்தது கோவையின் வானம்.

நேரம் ராத்திரி 9.15.

காந்திபுரம் டெர்மினல் பஸ் ஸ்டேண்டில் 64ம் எண் பஸ்ஸை விட்டு உதிர்ந்தபோதுதான் குழலி நினைத்தாள், 'ஆபீஸ் முடிந்ததும் நேராய் பஸ் பிடித்து வீடு திரும்பியிருக்க வேண்டும். ஆபீஸ் கொலீக் பிருந்தா கூப்பிட்டாள் என்பதற்காக அவள் கட்டியிருக்கும் புது வீட்டைப் பார்ப்பதற்காக தொண்டாமுத்தூர் வரை போயிருக்கக் கூடாது. போய்விட்டு ஒரு அரைமணி நேரத்தில் திரும்பியிருக்க வேண்டும். ஆனால் ஏதேதோ பேசிக் கொண்டு இருந்ததில் இரண்டு மணி நேரம் கடந்து இருட்டியும் விட்டது. பிருந்தா கூப்பிட்ட போது ஒரு ஞாயிற்றுக் கிழமை வருகிறேன் என்று சொல்லியிருக்க வேண்டும். மழை எந்த நிமிஷமும் கொட்டலாம். வீசுகிற காற்றைப் பார்த்தால் மழை விடிய விடிய கொட்டும் போல் தோன்றுகிறது.'

பஸ் ஸ்டேண்டுக்கு வெளியே வந்தவள் ஆட்டோ ஒன்றைப் பிடித்தாள்.

"ரமணா நகர் போகணும்!"

"நூத்தி ஐம்பது ரூபாயாகும்மா!"

"மீட்டர் போட மாட்டீங்களா?"

"மீட்டர் இருந்தாத்தானே போடறதுக்கு?"

"நூறு ரூபாய் வாங்கிக்குங்க..."

"ஏம்மா! ரமணா நகர் கிராஸ்கட் ரோட்டின் ஏழாவது சந்தோட கடைசியில் இருக்கு. போனா திரும்பி வரும்போது சவாரி கிடைக்காது. மழை வேற வர்ற மாதிரி இருக்கு.... நூத்தி ஐம்பது ரூபாய்ன்னா ஆட்டோ வரும். இல்லேன்னா வேற ஆட்டோ பார்த்துக்கம்மா!"

மேலே வானம் உறுமியது. மின்னல் கீற்று அடிவானத்தில் வேக வேகமாய் ஒரு கையெழுத்தைப் போட்டுவிட்டு மறைந்தது.

குழலி ஒரு தீர்மானத்துக்கு வந்தாள்.

'பேரம் பேச இது நேரமில்லை!'

ஆட்டோவில் ஏறி உட்கார்ந்தாள். ஆட்டோ கிளம்பி போக்குவரத்து குறைந்திருந்த க்ராஸ்கட் ரோட்டில் ஓடியது. ஃப்ளக்ஸ் பேனர்களோடு கூடிய பிரம்மாண்டமான ஜவுளிக்கடைகளையும், நகைக் கடைகளையும் ஷட்டர்கள் போட்டு இழுத்து மூடிக் கொண்டிருந்தார்கள்.

காற்றில் மண் வாசனை.

எங்கோ மழை தன் கச்சேரியை ஆரம்பித்திருக்க வேண்டும். ஏழாவது க்ராஸ்கட் ரோட்டில் ஆட்டோ திரும்பியது. சற்றே இருட்டான ரோடு. ஆட்டோ பாதி தூரத்தைக் கடந்து இருந்த போது குழலியின் செல்போன் அவளுடைய கைப்பையிலிருந்து விழித்துக் கொண்டு கத்தியது. கைப்பையின் ஜிப்பைப் பிரித்து உள்ளே ஒளிர்ந்து கொண்டிருந்த செல்போனை எடுத்தாள். அழைப்பது யார் என்று பார்த்தாள்.

அவளுடைய தோழி மானஸா.

குழலி செல்போனை காதுக்கு ஒற்றினாள்.

"சொல்லு மானஸா!"

"என்ன.... இன்னும் வீட்டுக்கு வரலை...! மணி

இப்ப என்ன தெரியுமா....? ஒன்பதரையாகப் போகுது...!"

"ஸாரி.... மானஸா....! தெரியாத்தனமாய் ஆபீஸ் முடிஞ்சதும் தொண்டாமுத்தூரில் இருக்கிற என் ஃப்ரண்டோட வீட்டுக்குப் போயிட்டேன். பேசிட்டே இருந்ததில் டயம் போனது தெரியலை....!"

"இப்ப நீ எங்கே இருக்கே...?"

"ஆட்டோவில் வந்துட்டு இருக்கேன். இன்னும் ஒரு பதினைஞ்சு நிமிஷத்துல வீட்ல இருப்பேன்... ரேவதி ஆபீஸிலிருந்து வந்தாச்சா?"

"வந்தாச்சு....!"

"இன்னிக்கு ஓவர்டைம் இருக்கு.... ஆபீஸிலிருந்து வீடு திரும்ப எப்படியும் ராத்திரி பத்து மணியாயிடும்ன்னு சொன்னாளே?"

"இன்னிக்கு ஓ.டி. இல்லையாம்.... ஆறுமணிக்கெல்லாம் வந்துட்டா."

"நீங்க ரெண்டு பேரும் சாப்பிட்டாச்சா...?"

"அது எப்படி சாப்பிடுவோம்...? நீ வராமே நாங்க என்னிக்கு தட்டுக்கு முன்னாடி உட்கார்ந்திருக்கோம்?"

"தாங்க்ஸ் மானஸா!"

"எதுக்கு இப்போ தாங்க்ஸ்?"

"இந்த அன்பு என்னிக்கும் நீடிக்கணும்."

"அழுதுடாதே.....! அப்புறம்.... இந்த ஏரியா பூராவும் பவர்கட். இருளோன்னு இருக்கு. நம்ம வீட்டுக்கு வர்றதுக்குள்ளே வழியில மூணு டாஸ்மாக் கடை....!"

"பயப்படாதே!"

"நீ அழகாய் இருக்கிறாய்.... அதனால் எனக்கு பயமாய் இருக்கிறது."

"சும்மா... ரீல் ஓட்டாதே...! இன்னிக்கு என்ன டிபன்?"

"சப்பாத்தியும் தாலும்"

"சூப்பர்! செம பசி... வந்துடறேன்!" குழலி செல்போனை அணைத்தாள். ஆட்டோ இப்போது குண்டும் குழியுமான ரோட்டில் குதித்து குதித்து ஓடிக்

கொண்டிருந்தது. சோகையான ட்யூப்லைட் வெளிச்சத்தில் ஒரு டாஸ்மாக் கடையும் சால்னா கடையும் கூட்டம் இல்லாமல் தெரிந்தது.

"டிரைவர்!"

"என்னம்மா?"

"கொஞ்சம் சீக்கிரமாய் போங்க...! மழை வந்துடப் போகுது."

"இந்த ரோட்ல வேகமாய் போக முடியாதம்மா... மழை வந்தா என்ன? அதுதான் ஆட்டோவில் படுதா இருக்கே... போட்டுக்க வேண்டியதுதான்..."

வானம் மேலே மறுபடியும் உறுமியது.

"நான் சொல்றேன்னு தப்பா நினைக்காதேம்மா. உன்னை மாதிரியான கண்ணுக்கு லட்சணமாய் இருக்கிற பொண்ணுங்க சாயந்தரம் ஆறுமணிக்குள்ளே வீடு போய் சேர்ந்துடணும். இந்த டாஸ்மாக் கடைகள் வந்த பின்னாடி ஜனங்ககிட்டே ஒழுக்கம் குறைஞ்சு போச்சும்மா...! பகல்ல பார்க்கிற ஆளு ராத்திரியில் பார்த்தா வேற மாதிரி இருக்கான். இன்னிக்கு தமிழ்நாட்ல பத்து பேர்க்கு எட்டுப் பேர் குடிக்கிறதாய் ஒரு சர்வே சொல்லுது. பீர் குடிக்காத காலேஜ் பையனே இல்லையாம்..."

ஆட்டோ டிரைவரின் பேச்சு குழலிக்கு எரிச்சலாய் இருந்தாலும் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல் 'ம்' கொட்டிக் கொண்டே வந்தாள். பிறகு ஏதாவது பேச வேண்டுமே என்பதற்காக அந்தக் கேள்வியைக் கேட்டு வைத்தாள்.

"இந்த 'டாஸ்மாக்' கடைகளை ஒழிக்க முடியாதா?"

"தாராளமாய் ஒழிக்க முடியும்..."

"எப்படி...?"

"அரசாங்கம் இதுல அதிகமாய் வருமானம் பார்த்துட்டதால 'டாஸ்மாக்'கை அரசாங்கம் ஒழிக்காது. குடிப்பழக்கம் இருக்கிற ஒவ்வொருத்தரும் 'இனிமே நாங்க குடிக்க மாட்டோம்'ன்னு உறுதிமொழி எடுத்துகிட்டா போதும். வேறு வழியில்லாமே அரசாங்கமே டாஸ்மாக் கடைகளை இழுத்து மூட வேண்டியதுதான்."

"இது நடக்கிற காரியமா?"

"ஒருநாளைக்கு நடக்கத்தான் போகுது....!" ட்ரைவர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே - வேகமாய்ப் போய்க் கொண்டிருந்த ஆட்டோ இப்போது சட்டென்று வேகம் குறைய - குழலி குழப்பமாய் குனிந்து பார்த்தாள்.

ரோட்டின் குறுக்கே ஒரு பெரிய பள்ளம் தோண்டப்பட்டிருக்க அதற்குள் ஒரு பெரிய சிமெண்ட் குழாய் பதிக்கும் வேலை பாதியில் நிறுத்தப் பட்டிருந்தது.

டிரைவர் கீழே இறங்கிப் போய் பார்த்துவிட்டு வந்தார்.

"மேற்கொண்டு ஆட்டோ போக முடியாது போலிருக்கேம்மா. ரமணா நகர்க்குப் போக வேற வழியும் இல்ல...! இருந்தா சுத்திகிட்டாவது போயிடலாம்."

குழலி நெற்றியைப் பிடித்துக் கொண்டாள். "காலையில் நான் இந்த வழியாய் போகும்போது பள்ளம் தோண்டலையே?"

"இது பி.டபிள்யூ.டி ஆட்களோட வேலை. நினைச்சா நடுரோட்ல குழியைத் தோண்டுவாங்க. ஜனங்களைப் பத்தி ஒருத்தனுக்கும் அக்கறை கிடையாது...!"

"இப்ப என்ன பண்றது?"

"ஒண்ணும் பண்ண முடியாது. இங்கிருந்து ரமணா நகர் அரை கிலோ மீட்டர் தூரம்தான் இருக்கும். இறங்கி நடந்து போயிடும்மா."

"மழை வேற வர்ற மாதிரி இருக்கே?"

"அதுக்கு... நான் என்ன பண்ணட்டும்மா...? ரமணா நகர்க்கு வேற வழியும் கிடையாது. மழை வர்றதுக்குள்ளே வேகமா நடந்து போயிரும்மா. வேணுமின்னா பேசின வாடகையில் ஐம்பது ரூபாயைக் குறைச்சுக்கோம்மா...!"

குழலி வேறு வழியில்லாமல் இறங்கினாள். மழை வரப்போகிறது என்னும் பயத்தில் எல்லோரும் வீட்டுக்குள் முடங்கியிருந்ததால் தெருவில் நடமாட்டம் அறவே அற்றுப் போயிருந்தது.

'டிரைவரைக் குறை சொல்லிப் பயனில்லை. இறங்கி நடக்க வேண்டியதுதான்!'

நூறு ரூபாய் நோட்டொன்றை எடுத்து டிரைவரின் கையில் திணித்துவிட்டு பள்ளத்தின் ஒரு ஓரமாய் நடந்து சாலையின் மறுபக்கம் போனாள் குழலி. காற்றின் வேகம் இப்போது அதிகரித்திருக்க எந்த நிமிஷமும் மழை பொத்துக் கொள்ளலாம். அதற்குள் வீடு போய் சேர முடியுமா?

விடுவிடுவென்று நடந்தாள்.

ரமணா நகர் ஒரு புற நகர் பகுதி என்பதால் வீடுகள் நெருக்கமாய் இல்லாமல் தள்ளி தள்ளி தெரிந்தன. மின்சாரம் இல்லாததால் சில வீடுகள் மட்டும் யூ.பி.எஸ்.ஸின் உதவியால் வெளிச்சப் புள்ளிகளைக் காட்டியது.

'மழை பிடித்துக் கொள்வதற்குள் வீடு போய் சேர்ந்துவிட முடியுமா?'

கால்களுக்கு வேகத்தைக் கொடுத்தாள் குழலி.

'இனி எப்போதும் இது போன்ற ஒரு இக்கட்டான நிலைமையை உருவாக்கிக் கொள்ளக்கூடாது!'

ஜனநடமாட்டம் அற்ற அந்த சாலையில் ஒரு ஐந்து நிமிஷம் நடந்து இருப்பாள்.

பின்னால் -

ஏதோ சத்தம் கேட்ட மாதிரி இருந்தது.

திரும்பிப் பார்த்தாள்.

யாரும் இல்லை.

'கேட்ட சத்தம் பிரமையா?'

'பிரமைதான்!' என்று எண்ணியவள் சற்றே நடையை எட்டிப் போட்டாள். மழைத்துளி ஒன்று நெற்றியில் பட்டு தெறித்தது.

மேலும் ஒரு நூறடி தூரம் நடந்து இருப்பாள். மறுபடியும் பின்னால் அந்த சத்தம் கேட்டது.

காலடிச்சத்தம்.

யாரோ பின் தொடர்கிறார்கள்.

அந்த இரவிலும் குழலியின் முகம் வியர்த்தது.

'வருவது யார்?'

'அந்த ஆட்டோ ட்ரைவரா...?'

'திரும்பிப் பார்க்கலாமா... வேண்டாமா...?'

'வேண்டாம்.... நடப்போம்.'

குழலி நடையின் வேகத்தை அதிகரித்தாள். காலடியோசையின் வேகமும் இப்போது கூடியிருந்தது.

'கடவுளே!'

குழலியின் இருதயத்துடிப்பு உச்சத்துக்குப் போயிற்று.

'என்ன செய்யலாம்?'

'ஓடலாமா?' என்று நினைத்த விநாடி அவளுடைய முதுகுக்குப் பின்னால் அந்தக் குரல் கேட்டது.

'என்னம்மா கண்ணு.... கொஞ்சம் நில்லம்மா!'

வித்தியாசமான குரல். அது ஆண்குரல் மாதிரியும் இல்லை. பெண்குரல் மாதிரியும் இல்லை. .

உடம்பெல்லாம் உதறிக் கொள்ள மெள்ளத் திரும்பிப் பார்த்தாள். இருட்டில் நிழல் உருவமாய் யாரோ பார்வைக்குக் கிடைத்தார்கள்.

குழலி உற்றுப் பார்த்தாள்.

அது ஒரு பெண் உருவம். நல்ல உயரம்.

'யாரிவள்?'

யோசித்துக் கொண்டே குழலி நிற்க, அந்தப் பெண் நெருங்கினாள். மட்டமான செண்ட் அவளுடைய தலையில் சூடியிருந்த மல்லிகைப் பூவோடு சேர்ந்து நாறியது. நெற்றியில் பெரிய பொட்டோடு சிரித்தாள்.

குழலிக்கு இப்போது புரிந்தது.

இவள் ஒரு திருநங்கை. இதே பகுதியில் இரண்டொரு தடவை பார்த்து இருக்கிறாள்.

"என்னம்மா கண்ணு...! ஆபீஸ் முடிஞ்சு இப்பத்தான் வீட்டுக்குப் போறியா...?"

குழலி மிரட்சியோடு 'ஆமாம்' என்கிற மாதிரி தலையாட்டி வைத்தாள்.

"இந்த ராத்திரி நேரத்தில் இப்படி தனியாய் போலாமா கண்ணு. நா வேணுமின்னா வீடுவரைக்கும் துணைக்கு வரட்டுமா?"

"வே... வேண்டாம்... நானே போயிடறேன்!"

"ஏன் வேண்டாம்னு சொல்றே... நா உனக்கு அக்கா மாதிரி. உன்னை வீட்ல கொண்டு போய் பத்திரமாய் விட்டுடறேன்... வா... அந்தக் கார்ல போயிடலாம்...!"

அவள் சுட்டிக்காட்டிய பக்கம் தன் பார்வையைக் கொண்டு போனாள் குழலி. சற்றுத் தள்ளி ஒரு மரத்துக்குக் கீழே கறுப்பு நிற ஆம்னி வேன் ஒன்று மினுமினுப்போடு தெரிந்தது.

குழலி அந்தக் காரையே பயமாய் பார்த்துக் கொண்டிருக்க திருநங்கை அவளுக்குப் பக்கத்தில் வந்து நின்று முகத்தில் மூச்சுக்காற்று படும்படி பேசினாள். சாராயம் நாறியது.

"என்ன கண்ணு...! இப்பத்தான் காரை முதல் தடவையாய் பார்க்கிற மாதிரி பார்த்துட்டிருக்கே... போய் கார்ல ஏறு..." சொன்ன திருநங்கை தன் இடுப்புக்கு கையைக் கொண்டு போய் எதையோ உருவி எடுத்தாள்.

ஒரு அடி நீளத்துக்கு கூரான நாக்கோடு கத்தி ஒன்று அவளுடைய கையில் பளபளத்தது.

**அ**ழகான குடும்பப் பெண்கள், கல்லூரி டீன் ஏஜ் பெண்களைக் குறிவைத்து இணையதள மோசடி கும்பல் ஒன்று 24 மணி நேரமும் கண் கொத்தி பாம்புகளைப் போல் கண்காணித்து வருகிறது. பொது இடங்களில் அவர்கள் உலா வரும்போது எசகு பிசகான கோணத்தில் போட்டோ எடுத்து அதனை இணைய தளங்களில் மார்பிங் செய்து வெளியிடும் மோசடி பேர்வழிகள் இருக்கிறார்கள். பஸ் மற்றும் ரயில்களில் பயணம் செய்யும் போது பச்சிளம் குழந்தைகளுக்கு பால் தர வேண்டிய கட்டாயம் இளம் தாய்மார்களுக்கு ஏற்படும்போது அதைக் கூட அந்த மகாபாவிகள் விட்டு வைப்பது இல்லை. அதையும் போட்டோ எடுத்து இணையதளத்தில் உலா விட்டு ரசிக்கிறார்கள்.




சென்னை திருவான்மியூர். விடியற்காலை ஐந்தரை மணி. கங்காதர் காலனியின் ஏழாவது மெயின் ரோட்டின் கார்னர் பங்களாவின் இரண்டாவது மாடியில் இருந்த படுக்கையறையில் செல்போன் ஒன்று அலாரத்துக்கான ரிங்டோனை வெளியிட்டது.

போர்வைக்குள் இருந்த பஞ்சலிங்கம் எழுந்து உட்கார்ந்தார். செல்போனின் அலாரத்தை நிறுத்திவிட்டு பக்கத்தில் படுத்துக் கொண்டிருந்த நப்பின்னையைத் தொட்டார்.

"நப்பின்னை"

"ம்...."

"மணி அஞ்சரை. நான் வாக்கிங்குக்கு கிளம்பறேன்."

நப்பின்னை போர்வைக்குள்ளிருந்தே குரல் கொடுத்தாள். "ராத்திரி பூராவும் மழை கொட்டித் தீர்த்து இருக்கு. இன்னிக்கு ஒருநாள் வாக்கிங் போகலைன்னா என்ன... படுத்து இன்னும் ஒரு மணி நேரத்துக்கு தூக்கத்தை கன்டினியூ பண்ணுங்க..."

"நோ... நோ... அடாது மழை பெய்தாலும் விடாது என் வாக்கிங் தொடரும். கடந்த முப்பது வருஷகாலமாய் நான் இந்த வாக்கிங்கை கன்டினியூ பண்றதால்தான் இந்த அம்பத்தாறு வயசிலேயும் இருப்பத்தாறு வயசு பையன் மாதிரி நம்ம பிசினஸ் வேலைகளை கவனிக்க முடியுது."

"சரி... சரி... காலங்கார்த்தால சுய தம்பட்டம் வேண்டாம். வாக்கிங் மட்டும் போயிட்டு ஒரு மணி நேரத்துக்குள்ளே வந்துடுங்க. மணிக்கணக்காய் யார்கிட்டேயும் பேசிட்டிருக்க வேண்டாம்."

"காலையிலேயே ஆரம்பிச்சுட்டியா உன்னோட அட்வைஸை...?"

"எல்லாம் நல்லதுக்குத்தான் சொல்றேன்" சொன்ன நப்பின்னை போர்வையை இழுத்துப் போர்த்துக்

கொள்ள பஞ்சலிங்கம் அறைக்குள்ளிருந்த அட்டாச் பாத்ரூமுக்குள் நுழைந்து அடுத்த பத்து நிமிஷத்தில் வெளிப்பட்டு ஜாக்கிங் சூட்டை மாட்டிக் கொண்டு கால்களுக்கு கான்வாஷ்களைக் கொடுத்தார். வாசல் கதவைத் திறந்து கொண்டு போர்டிகோவுக்கு வந்தபோது அந்த அதிகாலைக் குளிர்காற்று பஞ்சலிங்கத்தின் உடம்பை சிலிர்ப்பாய் தடவி விட்டது.

போர்டிகோவில் இருந்த காரைச் சுற்றிக் கொண்டு காம்பெளண்ட் கேட் அருகே வந்த போது வாட்ச்மேன் கண்ணுசாமி ஸ்டூலினின்றும் பவ்யமாய் எழுந்து சல்யூட் வைத்தான்.

"என்ன கண்ணுசாமி... ராத்திரி பூராவும் மழையா?"

"ஆமாங்கய்யா... ராத்திரி பதினோரு மணிக்கு பிடிச்ச மழை மூணு மணிவரைக்கும் இருந்தது. ஆனா பெரிய மழை இல்லீங்கய்யா... நச நசன்னு தூறிட்டே இருந்தது. வாக்கிங் பார்த்து போங்கய்யா... ரோட்ல தண்ணி தேங்கியிருக்கும்."

"இப்பத்தான் உன்னோட எஜமானியம்மா அட்வைஸ் பண்ணினா. இப்ப நீ ஆரம்பிச்சுட்டே...!" பஞ்சலிங்கம் சிரித்துக் கொண்டே கேட்டுக்கு வெளியே வந்தார். எதிர்பங்களாவிலிருந்து நீல வண்ண டீ சர்ட்டில் தொப்பை பிதுங்க டாக்டர் சாமுவேல் "குட்மார்னிங்" சொல்லிக் கொண்டே வெளிப்பட்டார்.

"குட்மார்னிங் டாக்டர்...!"

சிரித்தார்கள்.

"இன்னிக்கு ரெண்டு பேரும் ஒரே நேரத்துல வாக்கிங் புறப்பட்டிருக்கோம்...!"

"மாசத்துல நாலைஞ்சு தடவை இப்படி நடக்கும்!"

சிரித்துக் கொண்டே இருவரும் ஒன்றாய் நடந்தார்கள். சென்னையின் கிழக்குவானம் மழை மேகங்களை விலக்கிவிட்டு கொஞ்சம் போல் சூரியனின் வருகைக்காக மஞ்சள் கலந்த சிவப்பை பூசியிருந்தது.

"என்ன டாக்டர் கடந்த ரெண்டு நாளா நீங்க பார்வைக்கே கிடைக்கலை...?"

"அதை ஏன் கேட்கறீங்க பஞ்சலிங்கம்... கடந்த வாரம் மட்டும் சிட்டியில் ஏழெட்டுப்பேர் தற்கொலை... பாடிகளை போஸ்ட் மார்ட்டம்பண்ண வேண்டிய இரண்டு டாக்டர்கள் லீவுல ஊருக்குப் போயிருக்காங்க. ஸோ... அந்த பி.எம். கேஸையெல்லாம் நான் பார்க்க வேண்டியதாயிடுச்சு..."

"எதனால ஏழெட்டு பேர் சூஸைட்?"

"பார்க்கப் போனா எல்லாமே அற்ப காரணங்கள்தான். இந்த அவசர உலகத்துல யார்க்குமே பொறுமையோ சகிப்புத்தன்மையோ கிடையாது. ஒரு அற்பமான விஷயத்தையெல்லாம் பெரிசாய் எடுத்துகிட்டு புருசன் பெண்டாட்டி சண்டை போடறாங்க. கடைசியில அது ஒரு தற்கொலையில் போய் முடியுது. நேத்து ஒரு பொண்ணு.... விமலான்னு பேரு... புருஷன்காரன் மத்தியானம் பசியோடு வீட்டுக்கு வந்திருக்கான். 'சாப்பாடு போடு'ன்னு சொல்லியிருக்கான். ஆனா அந்த பொண்ணு கையில செல்போனை வெச்சுகிட்டு வீடியோ கேம்ஸ் விளையாடிட்டு இருந்திருக்கு... புருஷன்காரன் ரெண்டாவது தடவையும் கூப்பிட்டுப் பார்த்தும் அந்தப் பொண்ணு வராமே போகவே அவன் கோபமாய் வந்து செல்போனைப் பிடுங்கி தரையில் போட்டு உடைச்சிருக்கான். அவ்வளவுதான்... அந்தப் பொண்ணு அடுத்த விநாடியே மடமடன்னு நடந்து போய் சமையலறைக்குள்ளாற நுழைஞ்சு உட்பக்கமாய் கதவைத் தாள்ப்பாழ் போட்டுகிட்டு கெரசினை எடுத்து தலையில ஊத்திகிட்டு நெருப்பு வெச்சுகிட்டா...!"

"அடேடே... அப்புறம்?"

"அப்புறம் என்ன... எரிஞ்சு கரிக்கட்டையாய் மார்ச்சுவரிக்கு வந்தா... நான்தான் போஸ்ட் மார்ட்டம் பண்ணினேன்."

"பொண்ணுக இப்படியும் இருக்காங்களே...?"

"எல்லாத்துக்கும் காரணம் இந்த டி.வி. சீரியல்கள் தான்!"

"எப்படி சொல்றீங்க...?"

"பாஞ்சாலி என்கிற ஒரு சீரியலில் இது மாதிரி ஒரு சீன் வருதாம். அதை அப்படியே பண்ணி காட்டியிருக்கா அந்தப் பொண்ணு!"

"இந்த விஷயத்தில் அந்தப் புருஷனாவது கொஞ்சம் பொறுமையாய் இருந்து இருக்கலாம்...!"

"கோபம் என்கிற ஒரு விஷயம் தனக்குத்தானே கொடுத்துக் கொள்ளும் ஒரு தண்டனை என்கிற விஷயம் பல பேர்க்கு தெரியறது இல்லை..."

இருவரும் பேசிக் கொண்டே நடைபாதையில் வேகமாய் நடந்தார்கள். எதிரே வந்த கோ-வாக்கர்ஸ் 'குட் மார்னிங்' சொல்லி கையை உயர்த்தி விட்டு கடந்தார்கள்.

பதினைந்து நிமிஷ நடையில் அந்த அருகம்புல் ஜூஸ் கடை வந்தது. கடைக்கு முன்பாய் போடப்பட்டு இருந்த பெஞ்சில் பத்துக்கும் மேற்பட்டவர்கள் ஜாக்கிங் சூட்களில் அருகம்புல் ஜூஸுக்காக காத்திருந்தார்கள்.

கடையின் ஓனர் நாராயணன் இரண்டு பேரையும் ஒரு சிநேக சிரிப்போடு பார்த்துவிட்டு கேட்டார்.

"என்ன ஸார்... அருகம் புல்லா... இல்லை... வெள்ளை பூசணி ஜூஸா...?"

"எப்பவும் அருகம்புல்தான்...!" டாக்டர் சாமுவேலும் பஞ்சலிங்கமும் காலியாய் இருந்த பெஞ்சில் உட்கார்ந்தார்கள். பக்கத்திலேயே சுடச்சுட அந்த தமிழ் நாளிதழ் கிடக்கவே அதை எடுத்துப் பிரித்தார் பஞ்சலிங்கம். தலைப்புச் செய்தி கொட்டை எழுத்துக்களில் சொன்னது.

"ஊழல் அரசியல்வாதிகள்
நீதியின் பிடியிலிருந்து தப்ப முடியாது."
- சுப்ரீம் கோர்ட் தலைமை நீதிபதி
அதிரடி பேச்சு.

இரண்டாவது பக்கத்தைப் பிரித்தார்.

"இலங்கை மீனவர்கள் பிரச்னை;

மத்திய அரசு வேடிக்கை பார்த்துக்
கொண்டு இருக்கக் கூடாது."
- முதலமைச்சர் பிரதமர்க்கு கடிதம்.

பஞ்சலிங்கம் நாளிதழின் மற்ற பக்கங்களைப் புரட்டி செய்திகளை மேற்பார்வையாய் பார்த்துக் கொண்டு இருக்கும்போதே கண்ணாடி டம்ளர்களில் அருகம்புல் ஜூஸ் வந்தது.

"என்ன நாராயணன்...! வர வர கஸ்டமர்ஸ் கூட்டம் அதிகமாயிட்டே போகுது."

நாராயணன் சிரித்தார். "எல்லாம் உங்க மாதிரியான பெரியவங்களோட ஆதரவுதான் ஸார்..."

"டெய்லி எத்தனை பேர் சாப்பிடறாங்க?"

"நூத்தி ஐம்பது பேர்க்கு குறையாது ஸார்."

"விலையை ஏத்திடாதே...!"

"மாட்டேன் ஸார்... இந்த வருமானமே போதும்!"

இருவரும் அருகம்புல் ஜூஸைக் குடித்து எழுந்தார்கள். பணத்தைக் கொடுத்துவிட்டு மறுபடியும் நடையை ஆரம்பித்தார்கள்.

"என்ன டாக்டர்! இந்த அருகம்புல் ஜூஸ் உண்மையிலேயே எபக்டீவ் தானா...? இல்லை... எல்லாரும் சொல்றாங்களேன்னு குடிச்சுட்டு இருக்கோமோ?"

"நோ... நோ... வெரி பவர்ஃபுல்...! காரணமில்லாமே நம்ம பெரியவங்க எதையுமே சொல்லலை...!"

வேகமாய் நடையைப் போட்டார்கள்.

"ஒரு மணி நேரத்துக்குள்ளே வாக்கிங்கை முடிச்சுகிட்டு வீட்டுக்கு திரும்பணும்ன்னு ஒய்ஃபோட உத்தரவு.....!"

"என்னோட வீட்லயும் அதே உத்தரவுதான்...!" சொன்ன டாக்டர் சட்டென்று ஒரு விநாடி நின்றார். முகம் வியர்த்திருந்தது.

"என்ன டாக்டர்...! ஏன் நின்னுட்டீங்க...?"

"வயித்தைக் குமட்டற மாதிரி இருக்கு...! சாப்பிட்ட அருகம்புல் ஜூஸ் என்னமோ பண்ணுது."

"நானும்தானே குடிச்சேன்... எனக்கு

அதுமாதிரியான ஃபீலிங் இல்லையே...!"

"வாமிட் வர்ற மாதிரி இருக்கு...!" சொன்ன டாக்டர் ப்ளாட்பாரத்தின் ஓரமாய் போடப்பட்டு இருந்த ஒரு சிமெண்ட் பெஞ்சின் மேல் போய் உட்கார்ந்தார்.

இப்போது வியர்வையின் சதவீதம் அதிகமாகியிருந்தது.

"டாக்டர்! ஒரு ஆட்டோவைக் கூப்பிடறேன். வீட்டுக்குப் போயிடலாம்." பஞ்சலிங்கம் சொல்லிக் கொண்டிருக்கும் போதே சாமுவேல் வயிற்றைப் பிடித்துக் கொண்டு பெரிதாய் ஓங்கரித்தார்.

அருகம்புல் சாற்றோடு ரத்தத் துளிகளும் தெறித்தது.

பஞ்சலிங்கம் பதறிப் போனவராய் சாமுவேலைத் தாங்கிப் பிடித்தார். அதிர்ந்து போனார். சாமுவேலின் நாசித்துவாரங்களிலும் ரத்தம் எட்டிப் பார்த்து வழியலாமா வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருந்தது. சத்தம் கேட்டு நடைப் பயிற்சியில் ஈடுபட்டிருந்த எல்லோரும் ஓடி வந்தார்கள். ஆளாளுக்கு கத்தினார்கள்.

"தண்ணி குடுங்க...!"

"ப்ளீடிங் அதிகமாய் இருக்கு...!"

"ஹாஸ்பிடல் கொண்டு போயிடலாம்..."

"என்னோட காரைக் கொண்டு வர்றேன்"

"ரெண்டு நிமிஷத்துக்கு முன்னாடி பார்த்தேன். நல்லாத்தானே இருந்தார்...!"

எல்லோருடைய பேச்சுக் குரல்களும் இரைச்சலாய் வெளிப்பட்டுக் கொண்டு இருக்கும்போதே சாமுவேலின் உயிர் உடலை விட்டு கொஞ்சம் கொஞ்சமாய் பிரிந்து கொண்டிருந்தது.

---

**சைபர்** குற்றங்கள் என்று சொல்லப்படுபவை எவையெவை என்பதை சின்னதாய் ஒரு பட்டியல் போட்டுவிடலாம். இண்டர் நெட், ஃபேஸ்புக், எஸ்.எம்.எஸ் போன்றவைகளில் செய்யப்படும் தில்லு முல்லுகள் மட்டும் சைபர் குற்றங்கள் இல்லை. ஸ்கைப், வாட்ஸ் அப், இண்டர்நெட் சாட்டில் பெண்களைத்

தொடர்பு கொண்டு பேசி அவர்களிடம் இருந்து அந்தரங்க விஷயங்களைப் பகிர்ந்து கொண்டு பிறகு அவர்களையே ப்ளாக்மெயில் செய்து செக்ஸ் தொந்தரவு கொடுப்பது, அவர்களின் அனுமதி இல்லாமல் புகைப்படங்களை வெளியிடுவது, படைப்பாளியின் படைப்புகளை உரிய அனுமதி பெறாமல் விற்பனை செய்வது போன்றவையும், பிரபலமான நபர்களின் பேரில் ஃபேஸ்புக், ட்விட்டரில் அக்கவுண்ட் ஓப்பன் செய்து அதில் மற்றவர்களைப் பற்றி அவதூறாய் எழுதுவது - இவைகள் எல்லாமே சைபர் குற்றங்கள்தான்.




குழலி அரண்டு போனவளாய் அந்த திருநங்கையைப் பார்த்தாள். அவள் தன் கையில் இருந்த கத்தியை குழலியின் தொண்டைக் குழியில் வைத்தாள்.

"சொல்றது காதுல விழலையா கண்ணு...! இன்னும் ஒரு நிமிஷத்துக்குள்ளே நீ அந்த கார்க்குள்ளே போய் உட்காரணும். இல்லேன்னா இந்தக் கத்தி உன்னோட உடம்புக்குள்ளே பாயும்."

குழலி வியர்த்து வழிந்து கொண்டு சுற்றும் முற்றும் பார்த்தாள்.

தெருவில் எந்த ஒரு ஜீவராசியின் சின்ன அசைவுகூட இல்லை. திருநங்கை அடித் தொண்டையில் உறுமினாள்.

"என்ன பார்க்கிறே? ஒழுங்கு மரியாதையாய் போய் கார்ல உட்கார்." கத்தி அவஸ்தையாய் நெருடியது.

குழலி வேறு வழியில்லாமல் காரை நோக்கி நகர்ந்த விநாடி அந்த சத்தம் கேட்டது.

ஒரு பைக்கின் 'தட் தட்' சத்தம்.

குழலி திருநங்கை இருவருமே திரும்பிப் பார்த்தார்கள்.

போலீஸ் இன்ஸ்பெக்டர்.

"ஸா... ஸார்..." என்ற கத்தலோடு குழலி இன்ஸ்பெக்டரை நோக்கி ஓட, திருநங்கை அதிர்ந்து போனவளாய் இருட்டில் நின்றிருந்த அம்பாஸிடர் காரை நோக்கிப் பாய்ந்தாள்.

"ஏய்... நில்லு...!" இன்ஸ்பெக்டர் கத்திக் கொண்டிருக்கும்போதே அம்பாசிடர் கார் ரிவர்ஸில் பின்வாங்கி மின்னல் வேகத்தில் விரைந்து மறைந்தது. தன் பைக்கில் பொருத்தப்பட்டிருந்த வயர்லஸ்ஸில் இன்ஸ்பெக்டர் கண்ட்ரோல் ரூமை தொடர்பு கொண்டார்.

"நான் குணசேகரன். க்ராஸ்கட் ரோடு ரமணா நகர் பி-7 போலீஸ் ஸ்டேஷன் இன்ஸ்பெக்டர். நான் சொல்ற விபரங்களை நோட் பண்ணிக்குங்க. ஒரு நிமிஷத்துக்கு முன்னாடி ரமணா நகர் எல்லையில் இருந்து ஒரு கறுப்பு நிற அம்பாசிடர் கார் மேற்குப் பக்கமாய் புறப்பட்டு போயிருக்கு. அதுல ஒரு பொண்ணு இருக்கா. அவ சாதாரணப் பெண்ணில்லை. ஸீம்ஸ் டு பி ட்ரான்ஸ் ஜெண்டர். அவ ஒரு பெண்ணைக் கத்தி முனையில் மிரட்டிகிட்டு இருந்தா... நான் மடக்கறதுக்குள்ளே தப்பிச்சுட்டா. டேக் ஆக்ஷன்...!"

பேசிவிட்டு வயர்லெஸ்ஸை அணைத்த இன்ஸ்பெக்டர் குணசேகரன் குழலியிடம் திரும்பினார்.

"அந்த திருநங்கைக்கும் உனக்கும் என்ன பிரச்னை?"

"ஒரு பிரச்னையும் கிடையாது ஸார். அவ யார்ன்னே எனக்குத்தெரியாது ஸார்."

"உம் பேர் என்ன?"

"குழலி ஸார்."

"உன் வீடு எங்கே...?"

"ரமணாநகர் எக்ஸ்டென்ஷன்ல ஸார்."

"இந்த ராத்திரி நேரத்துல இப்படி தனியா வெளிலே போயிட்டு வர்றீங்களே?"

"இப்படியொரு நிலைமையை நான் எதிர்பார்க்கவேயில்லை ஸார். ஆபீஸ் முடிஞ்சதும் ஒ

ஃப்ரண்ட் வீட்டுக்குப் போயிருந்தேன். அங்கே லேட்டாயிடுச்சு. பஸ் ஸ்டாண்டிலிருந்து ஆட்டோ பிடிச்சேன். ரமணா நகர்க்குப் போகிற வழியில் ஒரு பள்ளம் தோண்டியிருந்ததால் மேற்கொண்டு ஆட்டோ போக வழியில்லாததால் இறங்கி நடக்க வேண்டியதாயிடுச்சு. அந்த திருநங்கை யாரு.... அவ எதுக்காக என்னை வழி மறிச்சு கார்ல ஏறச் சொன்னான்னு தெரியலை...!"

"கவலைப்பட வேண்டாம். அவளை எப்படியும் கண்டுபிடிச்சுடலாம். நீ பைக்ல ஏறி உட்கார்ம்மா. உன்னை வீட்ல கொண்டு போய் விட்டுடறேன்..."

"உங்களுக்கு எதுக்கு ஸார் சிரமம்...? இனி கொஞ்ச தூரம்தான். நானே நடந்து போய்க்குவேன்...!"

"பரவாயில்லை ஏறும்மா... தலைக்கு மேல மழை வாயைத் திறந்தா விடியறவரைக்கும் பெய்யும் போலிருக்கு!"

குழலி மேற்கொண்டு மறுப்பு சொல்ல முடியாமல் ஏறி உட்கார்ந்தாள். பைக் கிளம்பியது.

"பேரு என்ன சொன்னேம்மா?"

"குழலி!"

"நல்ல பேரு...! சொந்த ஊர் இதே கோயமுத்தூர் தானா?"

"இல்லை ஸார்... மதுரை."

"இங்கே எப்படி...?"

"நான் இங்கே ஒரு ஐ.டி. கம்பெனியில் வேலை பார்க்கிறேன் ஸார். என்னோட அம்மா, அப்பா எல்லோரும் மதுரையில் இருக்காங்க ஸார்."

"அப்படீன்னா நீ இப்ப வீடுன்னு சொன்னியே! இங்கே யார் இருக்காங்க...?"

"என்னைப் போலவே வேலைக்குப் போற ரெண்டு பெண்கள் என்கூட ஸ்டே பண்ணியிருக்காங்க ஸார்..."

"இனிமே இப்படியெல்லாம் தனியாய் வராதீங்க!"

"என்னிக்குமே இது மாதிரி நடந்தது இல்லை!"

"எல்லா நேரமும் ஒரே மாதிரி இருக்காதம்மா...! கடந்த ரெண்டு மாச காலமாவே இந்த ஏரியாவில்

க்ரைம் அஃபென்ஸ் ஜாஸ்தி. செயின் ஸ்நாட்ச்சிங், ஹவுஸ் பிரேக்கிங் அண்ட் லூட்டிங், ஈவ் டீஸிங் இப்படி ஏதேதோ நடந்துட்டு இருக்கு... நான் இன்னிக்கு எதேச்சையா இந்தப் பக்கம் வந்ததினால உன்னைக் காப்பாத்த முடிஞ்சுது. இல்லேன்னா என்னாகியிருக்கும்..."

"புரியுது ஸார்! இனிமே நான் கொஞ்சம் எச்சரிக்கையாய் இருந்துக்குவேன் ஸார். அடுத்த 'கட்'ல திரும்புங்க ஸார்."

பைக் திரும்பியது.

"நேராய் போய் செகண்ட் ரைட்ல கட் பண்ணினா கடைசி வீடு ஸார்...!"

பைக், சரியான பராமரிப்பு இல்லாத - தெரு விளக்குகள் எரியாத சாலையில் பயணித்து இரண்டாவது தெருவுக்குள் திரும்பி அந்த கடைசி வீட்டுக்கு முன்பாய்ப் போய் நின்றது.

அதே விநாடி -

மழையும் பிடித்துக் கொண்டது.

"போச்சுடா...!"

"ஸார்! பைக்கை நிறுத்திட்டு உள்ளே வாங்க."

"வேற வழி?"

இருவரும் வீட்டின் காம்பௌண்ட் கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே போனார்கள். குழலி வாசற்படி ஏறி அழைப்பு மணியின் பொத்தானுக்கு வேலை கொடுக்க நைட்டியோடு இருந்த மானஸா கதவைத் திறந்தாள்.

"வர... வர... உனக்கு...?" என்று கோபமாய் ஏதோ பேச முயற்சித்த மானஸா குழலியின் முதுகுக்குப் பின்னால் நின்றிருந்த இன்ஸ்பெக்டரைப் பார்த்ததும் வெகுவாய் முகம் மாறி பேச்சை அப்படியே நிறுத்திக் கொண்டாள்.

இருவரும் உள்ளே நுழைந்தார்கள்.

"மானஸா! ஒரு சேரை எடுத்துப் போடு. ஸார் உட்காரட்டும்!"

அவசர அவசரமாய் ஒரு ஃபோல்டிங் சேர் விரிக்கப்பட்டது.

"உட்கார்ங்க ஸார்...!"

குணசேகரன் உட்கார்ந்தார்.

"ஸார்...! ஷி ஈஸ் மானஸா. இவளும் ஒரு சாஃப்ட்வேர் கம்பெனியில்தான் ஓர்க் பண்றா."

சமையலறையிலிருந்து எட்டிப் பார்த்த ஒரு பெண்ணைச் சுட்டிக் காட்டி "அவ மெஹருன்னிஸா... ஒரு ஃபைவ் ஸ்டார் ஹோட்டலில் கம்ப்யூட்டர் ஆப்ரேட்டராய் இருக்கா...!"

மானஸா கலவரமாய் குணசேகரை ஏறிட்டாள்.

"ஸார்! ஏதாவது பிரச்னையா?"

"பிரச்னை வர்ற மாதிரி இருந்தது. போயிடுச்சு!"

"புரியலை...!"

"நான் உனக்கு அப்புறமா எல்லாம் புரியற மாதிரி சொல்றேன். மொதல்ல ஸார்க்கு டீ போட்டுக் கொண்டா!"

"அதெல்லாம் ஒன்றும் வேண்டாம்மா...! மழையோட வேகம் கொஞ்சம் குறைஞ்சதும் நான் புறப்படறேன்...!"

"ஸார்! வெளியே மழை பெய்யற வேகத்தைப் பார்த்தா அது இப்போதைக்கு நிக்காது போலிருக்கே...?"

"டீ போட வேண்டியதே இல்லை... ஃப்ளாஸ்க்ல டீ ரெடியாய் இருக்கு... ஏலக்காய் இஞ்சி போட்ட டீ ஸார்!"

மெஹருன்னிஸா ஃப்ளாஸ்க்கோடு சமையலறையினின்றும் வெளிப்பட்டாள். கண்ணாடி டம்ளரில் டீயை ஊற்ற - தனக்கு என்ன நேர்ந்தது என்பதைக் குழலி சொல்லி முடிக்க, மானஸாவும் மெஹருன்னிஸாவும் முகங்களில் நிறம் இழந்து போனார்கள்.

"ஸார்! நீங்க மட்டும் சரியான நேரத்துக்கு வராமே இருந்திருந்தா குழலியோட கதி என்னாகியிருக்கும்?"

குணசேகரன் சிரித்தார். "கடவுள்ன்னு ஒருத்தர் எதுக்காக இருக்கார்?" சொன்னவர் தன் சட்டையின் மேல் பாக்கெட்டைத் தொட்டுப் பார்த்துவிட்டு சற்றே பதட்டமாய் எழுந்தார்.

“என்ன ஸார்?”

“என்னோட செல்போனை பைக்கிலேயே விட்டுட்டேன் போலிருக்கு...! அது ஒரு லெதர் பேக்குக்குள்ளேதான் இருக்கு. இருந்தாலும் போய் எடுத்துட்டு வந்துடறேன்.”

“குடை எடுத்துட்டு போங்க ஸார்” மானஸா உள்ளே போய் ஒரு குடையை எடுத்துக் கொண்டு வந்து கொடுக்க குணசேகரன் அதை வாங்கிக் கொண்டு வெளியே போனார்.

குழலியின் தலையில் மெஹருன்னிஸா ஒரு தட்டு தட்டினாள்.

“இனிமேலாவது ஆபீஸ் விட்டதும் யாரையும் போய்ப் பார்க்காதே. நேரா வீடு வந்து சேரு....!”

“நான் அந்த முடிவுக்கு வந்து ரொம்ப நேரமாச்சு.”

“நாம இன்னொரு முடிவையும் எடுத்தாகணும்”

“என்ன?”

“இந்த ரமணா நகர் ஏரியாவிலிருந்து வீடு மாறணும். இது உள்ளே ரொம்பவும் ரிமோட்டடா இருக்கு! ஸேஃப்டி சுத்தமாய் இல்லை.”

“ஏதாவது ஒரு அபார்ட்மெண்ட்டுக்கு போயிலாம். 24 மணி நேரமும் செக்யூர்ட்டி இருப்பாங்க...!”

குழலி சட்டென்று கையமர்த்தினாள் “ஒரு நிமிஷம்!”

“என்ன?”

“வெளியே ஏதோ சத்தம் கேட்ட மாதிரி இல்லை?”

“மழை பெய்யற சத்தம்தான் கேட்குது.”

“இல்லே. யாரோ கத்தற மாதிரியான சத்தம் எனக்கு கேட்டது. வா, போய்ப் பார்த்துடலாம்.”

மூன்று பேரும் வாசலுக்கு ஓடினார்கள்.

மழை சீரான வேகத்தில் பெய்து கொண்டிருக்க

இன்ஸ்பெக்டர் குணசேகரனின் பைக் கீழே விழுந்திருந்தது. சற்றுத்தள்ளி குணசேகரன் கைகளையும், கால்களையும் பரப்பிக் கொண்டு ரத்த வெள்ளத்தில் மல்லாந்து தெரிந்தார்.

"ஸ... ஸ... ஸார்...!"

குழலி பெரிதாய் அலறிக் கொண்டு மழையில் நனைந்தபடி ஓடி அவர் அருகே குனிந்தாள்.

உறைந்தாள்.

'அரிவாளால் வெட்டியிருக்கிறார்கள்!'

தலை துண்டாகி தெரிந்தது.

**சை**பர் க்ரைம் குற்றங்கள் இந்த அளவு பெருகக் காரணம் நம் நாட்டில் மட்டுமே 87 கோடி செல்போன் இணைப்புகள் உள்ளன. இவைகள் அனைத்துமே பயன்பாட்டில் உள்ளன. இந்தியாவிலேயே உ.பி.யில் மட்டும் 13 கோடி செல்போன் இணைப்புகள் என்ற எண்ணிக்கையில் முதலிடம் பெற்றுள்ளது. இதற்கு அடுத்தபடியாக தமிழ் நாட்டில் 8 கோடி செல்போன் இணைப்புகள் உள்ளன. செல்போன் மூலம் இண்டர்நெட்டை பயன்படுத்துவோர் எண்ணிகை 16 கோடியாக உள்ளது. இதில் இளையதலைமுறையின் பங்கு அதிகமாய் இருப்பதால் சைபர் குற்றங்கள் பெரிய அளவில் எட்டிப் பார்க்கின்றன.




**செ**ன்னையின் போலீஸ் கமிஷனர் குகநேசன் தன் கையில் இருந்த போஸ்ட்மார்ட்டம் ரிப்போர்ட் முழுவதையும் படித்துவிட்டு தனக்கு முன்பாய் உட்கார்ந்திருந்த அஸிஸ்டண்ட் கமிஷனர் ஜெயச்சந்திரனை ஏறிட்டார்.

"ஸோ! டாக்டர் சாமுவேலின் மரணத்துக்குக் காரணம் அந்த அருகம்புல் ஜூஸில் கலந்து இருந்த விஷம்... இல்லையா?"

"ஆமா... ஸார்! அந்த விஷத்துக்குப் பேரு ரிசின்"

"என்ன பேர் சொன்னீங்க? ரிசினா?"

"ஆமா ஸார்...! அந்த விஷம் க்ரீன் கலர்ல இருக்குமாம்."

"அதனால்தான் அருகம்புல் ஜூஸில் அதை மிக்ஸ் பண்ணியிருக்காங்க."

"மே... பி... ஸார்."

"அந்த அருகம்புல் ஜூஸ் வியாபாரி என்ன சொல்றான்?"

"அவன் அரண்டு போயிருக்கான் ஸார்...! அவனை விசாரிக்க வேண்டிய விதத்துல எப்படி யெல்லாமோ விசாரிச்சுப் பார்த்துட்டோம். அவனுக்கும் இந்த மர்டர்க்கும் எந்த ஒரு சம்பந்தமும் இல்லை ஸார்

அந்த இடத்தில் இருந்த வேற யாரோ சாமுவேல் சாப்பிட்ட அருகம்புல் ஜூஸில் விஷத்தைக் கலந்து இருக்காங்க!"

"அவரோட ஃப்ரண்ட் பஞ்சலிங்கத்தோட ஸ்டேட்மெண்ட் என்ன?"

"சாமுவேலும் அவரும் பல வருட கால நண்பர்கள் ஸார். ரெண்டு பேரும் ஒண்ணாத்தான் அருகம்புல் ஜூஸ் சாப்பிட்டிருக்காங்க...!"

"பஞ்சலிங்கம் எப்படிப்பட்டவர்ன்னு என்கொயர் பண்ணீங்களா?"

"பண்ணினேன் ஸார்... ஹி ஈஸ் ஏ பிசினஸ் மேன். அவர் மேல சந்தேகப்பட எந்த ஒரு முகாந்திரமும் இல்லை."

"எதுக்கும் அவர் மேல ஒரு பார்வை இருக்கட்டும்!"

"அவர் மேல மட்டும் இல்லை ஸார்... சாமுவேல் அருகம்புல் ஜூஸ் சாப்பிட்ட நேரத்துல அந்தக் கடையில் மொத்தம் பதினோரு பேர் இருந்திருக்காங்க. அவங்க அத்தனை பேரையும் கண்காணிக்க ஒரு ஸ்பெஷல் ஸ்க்வாட் போட்டிருக்கேன்."

"தட்ஸ் குட்... சாமுவேல் ஒய்ஃப் கிட்டே பேசிப் பார்த்தீங்களா?"

"சாமுவேலோட ஒய்ஃப் கீதாராணி இப்போ பேசக்கூடிய நிலைமையில் இல்லை ஸார்."

"ஏன்?"

"கணவரோட மரணம் அவரோட மனசை பெரிய

அளவில் பாதிச்சிருக்கு... டூ மச் ஆஃப் ஸ்ட்ரெஸ். அதிலிருந்து அவர் விடுபடணும். அதற்குப் பிறகுதான் பேச முடியும்!"

"டை... த... டை... அந்த கீதாராணி, சாமுவேலோட ரெண்டாவது ஒய்ஃப்தானே?"

"ஆமா... ஸார்."

"ஃபர்ஸ்ட் ஒய்ஃப் என்ன ஆனாங்க?"

"அவங்க டைவோர்ஸ் வாங்கிகிட்டு தூத்துக்குடி போயிட்டதாய் முதல்கட்ட விசாரணையில் தெரிய வந்தது ஸார்."

"எதனால டைவர்ஸ்?"

"தெரியலை ஸார்."

"சாமுவேலுக்கு குழந்தைங்க?"

"இல்லை ஸார்,..."

"ஃபர்ஸ்ட் ஒய்ஃபோட பேர் என்ன?"

"ஜெனிஃபர்ன்னு நினைக்கிறேன் ஸார்."

போலீஸ் கமிஷனர் மேஜையின் இழுப்பறையைத் திறந்து ஒரு பாஸ்போர்ட் சைஸ் போட்டோவை எடுத்து நீட்டினார்.

"இந்தப் போட்டோவைப் பாருங்க"

பார்த்தார்.

நடுத்தரவயதில் ஒரு பெண்.

"யார் ஸார் இவங்க?"

"ஜெனிஃபர்! தூத்துக்குடி சிலுவைபுரத்தில் இருக்காங்க. டாக்டர் சாமுவேலும் ஜெனிஃபரும் சட்டரீதியாய் பிரிஞ்சாலும் மனரீதியாய் பிரியலை."

"நீங்க என்ன ஸார் சொல்றீங்க?"

"எஸ்...! கோர்ட்ல இவங்களுக்கு டைவோர்ஸ் கிடைச்ச பிறகு ஒரு வருஷம்தான் பிரிஞ்சு வாழ்ந்தாங்க. கீதாராணியை ரெண்டாவது கல்யாணம் பண்ணின சாமுவேலுக்கு அவர் எதிர்பார்த்த மன நிம்மதியான மண வாழ்க்கை கிடைக்கலை. முதல் மனைவியைத் தேடி அடிக்கடி தூத்துக்குடி போக ஆரம்பிச்சார். இந்த விஷயம் ஒரு நாள் கீதாராணிக்கு தெரிய வந்தது. அதுக்கப்புறம் அந்தக் குடும்பத்துல எது மாதிரியான சூழ்நிலை உருவாகியிருக்கும்ன்னு

நினைக்கிறீங்க?"

"ஒரு எரிமலையாய் மாறியிருக்கும் ஸார்."

"அந்த எரிமலையோட சீற்றம்தான் இந்தக் கொலை"

"சாமுவேலோட மரணத்துக்குக் காரணம் கீதாராணின்னு சொல்ல வர்றீங்களா ஸார்?"

"ஏன்... ஜெனிஃபராகவும் இருக்கலாமே?"

"எப்படி ஸார் சொல்றீங்க...?"

"இது என்னோட கெஸ் ஒர்க்தான்...! நீங்க இன்னிக்கே தூத்துக்குடி போய் இந்த அட்ரஸ்ல இருக்கிற ஜெனிஃபர்கிட்டே ஒரு ரகசிய விசாரணையை நடத்துங்க... ஏதாவது ஒரு பக்கமிருந்து உண்மை கசியும்! இந்தாங்க அட்ரஸ்."

ஒரு துண்டு பேப்பரை நீட்டினார்.

"ஸ... ஸார்...!"

"என்ன...?"

"இவ்வளவு டீடெய்ல்ஸும் உங்களுக்கு எப்படி?"

"தெரிஞ்சுதுன்னு கேக்கறீங்களா... சாமுவேல் - ஜெனிஃபர் பத்தின இத்தனை விபரங்களையும் சொன்னது வேறு யாருமில்லை. அவரோடு ஒண்ணாச் சேர்ந்து வாக்கிங் போயிட்டிருக்கிற பஞ்சலிங்கம்தான்!"

"ஸார்! அவர்கிட்டே நான் விசாரணை நடத்தினபோது இந்த விபரங்களையெல்லாம் அவர் என்கிட்டே சொல்லவேயில்லையே?"

"நான்தான் சொல்ல வேண்டாம்னு அவர்கிட்டே சொல்லியிருந்தேன்."

"ஏன் ஸார் அப்படி...?"

"பஞ்சலிங்கம் எனக்கு நண்பர். டாக்டர் சாமுவேலுக்கு இப்படியொரு மரணம் நேர்ந்ததுமே என்னை அவர் போன்ல காண்டாக்ட் பண்ணி சாமுவேலோட குடும்பப் பின்னணியைப் பற்றி விபரமாய் என்கிட்டே சொல்லிவிட்டார். இதைப் பற்றி வெளிப்படையாய் யார்கிட்டேயும் பேச வேண்டாம்னு நான்தான் அவர் கிட்டே கேட்டுகிட்டேன். நீங்களும் இதைப்பத்தி வெளியே

யார்கிட்டேயும் பேச வேண்டாம். விசாரணை எல்லாமே திரைமறைவில் இருக்கட்டும்."

"நான் இன்னிக்கே தூத்துக்குடி புறப்படறேன் ஸார்."

"யூனிஃபார்மை அவாய்ட் பண்ணிட்டு மஃப்டியில் போங்க. ஜெனிஃபர்கிட்டே என்கொயரி ஸாஃப்ட்டாய் இருக்கட்டும். அவளை நீங்க சந்தேகப்படறது அவளுக்குத் தெரியக்கூடாது...!

"எஸ்....ஸார்..." அஸிஸ்டண்ட் கமிஷனர் ஒரு சல்யூட்டைக் கொடுத்துவிட்டு வெளியேறினார். கமிஷனர் குகநேசன் மினரல் வாட்டர் பாட்டிலை எடுத்து ஒரு வாய் தண்ணீரை விழுங்கிவிட்டு நாற்காலிக்கு நன்றாய் சாய்ந்து உட்கார்ந்தபோது அவருடைய உதவியாளர் வந்தார். கையில் ஒரு கவர்.

"ஸார்... இன்னிக்கு வந்த குறை தீர்க்கும் மனுக்களில் இந்த ஒரு கவர் இருந்தது. கவர்க்கு மேலே 'இதை கமிஷனர் மட்டும் பிரித்துப் பார்க்கவும்'ன்னு ஒரு வாசகம் எழுதியிருந்தது. அதான் கொண்டு வந்தேன்...!"

உதவியாளர் நீட்டிய அந்தக் கவரை வாங்கிப் பார்த்தார் குகநேசன்.

செவ்வக வடிவ கவரின் இடதுபக்க மூலையில் KIND ATTENTION என்று போடப்பட்டு அதற்குக் கீழே **'கமிஷனர் மட்டும் இந்தக் கவரைப் பிரிக்கவும்'** என்று தமிழில் எழுதப்பட்டு இருந்தது.

குகநேசன் கவரின் வாயைக் கிழித்தார்.

உள்ளே -

நான்காய் மடிக்கப்பட்ட ஒரு வெள்ளைத்தாள் இருந்தது. எடுத்துப் பிரித்தார். தாளின் மேல் பகுதியில் ஒரு போட்டோவிலிருந்து வெட்டி எடுக்கப்பட்ட ஒரு மனித மூக்கு ஒட்டப்பட்டு தெரிந்தது.

கீழே வாசகங்கள் ஓடியிருந்தது.

**கமிஷனர் ஸார்!**

அருகம்புல் ஜூஸில் விஷம் கலந்து கொடுத்து டாக்டர் சாமுவேலைக் கொலை செய்த நபர் யார் என்று எனக்குத் தெரியும். இப்போது நான் அதை வெளியே சொல்ல முடியாத நிலைமை. எனவே

என்னிடம் இருந்த கொலையாளியின் போட்டோவில் மூக்கை மட்டும் வெட்டியெடுத்து இந்தத் தாளில் ஒட்டி அனுப்பியுள்ளேன். முடிந்தால் கண்டு பிடித்துக் கொள்ளுங்கள். (நீங்களும் வாங்கும் சம்பளத்துக்கு வேலை பார்க்க வேண்டாமா என்ன?)

குகநேசன் எரிச்சலாய் நிமிர்ந்தார்.

"இந்தலெட்டர் உங்களுக்கு எப்போ கிடைச்சுது?"

"இப்போ... ஒரு பத்து நிமிஷத்துக்கு முன்னாடிதான் ஸார்."

"சரி... நீங்க போங்க!"

"எஸ்... ஸார்...!"

அவர் போனதும் அந்த லெட்டரில் ஒட்டப்பட்டு இருந்த மூக்கைப் பார்த்தார். மனசுக்குள் எண்ணம் பரபரவென்று ஓடியது.

'யாரோ விளையாடுகிறார்கள்..!'

இன்றைய சூழலில் ஒரு பெண்ணைப் பற்றி முழுமையாகத் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் அவளுடைய ஃபேஸ்புக் பக்கத்துக்குச் சென்று ஒரு கன்ஃபார்ம் ரெக்வெஸ்ட் கொடுத்து ஃப்ரண்ட் ஆக்கிக் கொண்டால் போதும் - அந்தப் பெண்ணின் ஒட்டு மொத்த குடும்ப ஜாதகமும் நம் கைக்கு வந்துவிடும். நாம் எல்லோரும் நல்லவர்களாய் இருந்துவிட்டால் பரவாயில்லை. நம்மில் சில வில்லன்களும் இருக்கிறார்களே? அவர்களிடம் இப்படிப்பட்ட பெண்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். தனக்கு ஏற்படும் பிரச்னைகளை ஃபேஸ்புக் நண்பர்களோடு பகிர்ந்து கொள்ளக்கூடாது. போட்டோக்களை 'ஷேர்' செய்துகொள்வதும் கூடாது. எதையுமே சற்றுத் தள்ளி நின்று கையாள்வது உத்தமமான விஷயம். செல்போன் எண்களைக் கொடுப்பதோ, அவர்களிடம் செல்போனிக் கான்வர்சேஷன்களை வைத்துக் கொள்வதோ கூடவே கூடாது.




குழலி, மானஸா, மெஹருன்னிசா மூன்று பேரும் நிலைகுலைந்து போனவர்களாய் நின்றிருக்க, கொட்டும் அந்த மழையிலும் போலீஸ் சம்பிரதாயங்கள் நடந்து கொண்டிருந்தன.

ஒரு மணி நேரத்துக்கு முன்பு தன்னைக் காப்பாற்றி வீடு கொண்டு வந்து சேர்த்த இன்ஸ்பெக்டர் குணசேகரன் இப்போது உயிரற்ற சடலமாய் ஒரு வெள்ளைத் துணியில் சுற்றப்பட்டு மார்ச்சுவரி வேனில் ஏற்றப்படுவதைப் பார்த்து இதயம் நொறுங்கி கண்களில் நீர் கோர்த்தாள் குழலி.

'எப்படி... இப்படியொரு பயங்கரம்?'

'எதற்காக...?'

'யார் வந்தது?'

அந்த இளவயது இன்ஸ்பெக்டர் போலீஸ் கான்ஸ்டபிள்களுக்கு சில இன்ஸ்ட்ரக்ஷன்களைக் கொடுத்துவிட்டு குழலியிடம் வந்தார். ஏற்கெனவே கேட்டிருந்தாலும் இரண்டாவது தடவையாய் அந்தக் கேள்வியைக் கேட்டார். யூனிஃபார்மில் இருந்த நேம்பேட்ச் அவர் பெயரை 'கதிர்' என்று சொன்னது.

"எப்படி சம்பவம் நடந்தது...? எதையும் மறைக்காமல் சொல்லணும்...?"

குழலி மறுபடியும் ஒரு தடவை நடந்த எல்லா சம்பவங்களையும் சொல்லி முடித்தாள். இன்ஸ்பெக்டர் கதிர் எல்லாவற்றையும் கவனமாய் செவிமடுத்து விட்டு ஒரு உன்னிப்பான பார்வையோடு கேட்டார்.

"அந்த திருநங்கைதான் இப்படியொரு கொலையைப் பண்ணியிருப்பாள்னு நினைக்கிறியா...!"

"எனக்குத் தெரியலை ஸார்."

"அந்த திருநங்கையோடு வேறு யாராவது இருந்தாங்களா?"

"இருட்டுல நின்னுட்டிருந்த கார்க்குள்ளே யாரோ உட்கார்ந்துட்டு இருந்த மாதிரி தெரிஞ்சுது...!"

கதிர் அடுத்த கேள்விக்குப் போகும் முன்பு அவருடைய செல்போன் மெலிதாய் ஒரு வயலின் நோட்டை வாசித்தது. எடுத்து இடது காதுக்குக் கொடுத்தார். மறுமுனையில் சப்-இன்ஸ்பெக்டர் பேசினார்.

"ஸார்... நான் சிவராமன்."

"சொல்லுங்க சிவராமன்."

"ஸார்! இங்கே டி.எஸ்.பி. ஆபீஸிலிருந்து பேசறேன் ஸார்."

"என்ன... குணசேகரனோட பர்சனல் ஃபைலைப் பார்த்துட்டீங்களா?"

"பார்த்துட்டேன் ஸார்."

"ஃபைல் ஸ்டடி என்ன சொல்லுது?"

"முப்பத்தெட்டு வயதான குணசேகரன் ஒண்டிக்கட்டை ஸார். ஃபேமிலி கிடையாது. சொந்த ஊர் சென்னை. போலீஸ் ட்ரெய்னிங் முடிஞ்சுதும் காஞ்சிபுரம் போஸ்டிங். அதுக்கப்புறம் சென்னை. சென்னையில் மட்டும் எட்டு வருஷம் இருந்துட்டு போன வருஷம்தான் கோயமுத்தூர் வந்து ரமணா நகர் போலீஸ் ஸ்டேஷன்ல சார்ஜ் எடுத்து இருக்கார்."

"ப்ளாக் மார்க்ஸ் எனி?"

"இல்ல ஸார்... நேர்மையாவும் சின்ஸியராகவும் இருந்து இருக்கார்."

"அப்படீன்னா எதிரிகள் அதிகம் இருக்க வாய்ப்பு இருக்கு..."

"எஸ்... ஸார்...!"

"அவரோட கேஸ் ஹிஸ்டரியில் விரும்பத்தகாத சம்பவங்கள் ஏதாவது நடந்து இருக்கா?"

"நாட் ஃபவுண்ட் ஸார்..."

"சரி... மிஸ்டர் சிவராமன்...! நீங்க அடுத்ததாய் பண்ண வேண்டிய வேலை ஒண்ணு இருக்கு."

"என்ன ஸார்?"

"இன்ஸ்பெக்டர் குணசேகரன் கடைசியாய் எந்த கேஸை டீல் பண்ணி யார்க்கு சிறைத்தண்டனை வாங்கிக் குடுத்து இருக்கார்ன்னு ரகசியமா விசாரணை

பண்ணி ஒரு ரிப்போர்ட் கொண்டு வாங்க."

"எஸ் ஸார்."

"நான் ஒரு மணி நேரம் கழிச்சு கமிஷனர் ஆபீஸுக்கு வந்துடறேன். நீங்களும் வந்துடுங்க. கமிஷனர் ஏகப்பட்ட டென்ஷன்ல இருக்கார். நாம கொலையாளியை ரெண்டு நாளைக்குள்ளே மடக்கியாகணும்!"

"எஸ் ஸார்!"

இன்ஸ்பெக்டர் கதிர் செல்போனை அணைத்த விநாடி -

கான்ஸ்டபிள் பக்கத்தில் வந்து நின்றார்.

"ஸார்!"

"என்ன?"

"கண்ட்ரோல் ரூமிலிருந்து தகவல் வந்திருக்கு ஸார்!"

"என்ன தகவல்?"

"அந்த திருநங்கையையும் அவள் பயணம் பண்ணின காரையும் மடக்கிட்டாங்களாம் ஸார்...!"

'தீதும் நன்றும் பிறர் தர... வாரா' என்று சொல்வார்கள். அது இந்த சைபர் க்ரைம் குற்றங்களுக்கும் பொருந்தும். முன்பின் தெரியாதவர்கள் உங்களிடம் பேனா, பென்ஸில் இரவல் கேட்டால் தாராளமாய் கொடுங்கள். ஆனால் 'அவசரம், ஒரு முக்கியமான செய்தியை ஒருவர்க்கு தெரியப்படுத்த வேண்டும்' என்ற வேண்டுகோளோடு சிலர் உங்களிடம் செல்போன் கேட்டால் கொடுத்துவிடாதீர்கள். அப்படி அவசரம் என்றால் அந்த நபரிடம் 'நீங்கள் யார்க்கு போன் செய்ய வேண்டும்? நெம்பர் சொல்லுங்கள்' என்று கேட்டுக் கொண்டு நீங்களே போன் செய்து விஷயத்தை தெரியப்படுத்துங்கள். அதற்குமாறாக அந்த நபரிடம் செல்போனைக் கொடுத்தால் அந்த போனை வைத்துக் கொண்டு ஏதாவது ஒரு நம்பர்க்கு ஏடாகூடமாய்ப் பேசி விபரீதத்தை விலைக்கு வாங்கிக் கொடுத்து விடுவார்கள். எனவே இந்த விஷயத்தில் எச்சரிக்கையாய் இருப்பது மிக மிக அவசியம்.



6

தூத்துக்குடி.

சிலுவைபுரம். காலை மணி பத்து.

நகரைவிட்டு தள்ளியிருந்த அந்த பிரதான தெருவில் இருந்த அந்த பங்களாவுக்கு முன்னால் டாக்ஸியை நிறுத்திக் கொண்டு டிரைவர் கேட்ட பணத்தைக் கொடுத்துவிட்டு காம்பௌண்ட் கேட்டை நோக்கிப் போனார் ஜெயச்சந்திரன்.

செல்போன் வைபரேஷனில் அதிர்ந்தது.

எடுத்தார்.

மறுமுனையில் போலீஸ் கமிஷனர் குகநேசன்.

"என்ன...! ஜெனிஃபர் வீட்டுக்குப் போயிட்டீங்களா?"

"அந்த வீட்டு வாசல்லதான் நிக்கறேன் ஸார்!"

"நீங்க போலிஸ் டிபார்மெண்ட்ன்னு அவள் துளியும் சந்தேகப்பட்டுவிடக்கூடாது."

"நான் பார்த்துக்கிறேன் ஸார்...!"

"அவகிட்டே பேசிட்டு வந்த பின்னாடி எனக்கு போன் பண்ணுங்க."

"ஷ்யூர் ஸார்!" செல்போனை அணைத்து பாக்கெட்டுக்குள் போட்டுக் கொண்ட ஜெயச்சந்திரன், வீட்டின் காம்பௌண்ட் கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே போனார்.

பெரிய வீடு. அகலமான தேக்கு மரக் கதவு. சுவரில் ஒட்டியிருந்த அழைப்பு மணியின் பட்டனைத் தேய்த்தார்.

உள்ளே அது 'விர்ர்ர்ர்' என்றது.

ஜெயச்சந்திரன் காத்திருக்க - முப்பது விநாடி அவகாசத்தில் கதவு திறந்தது. நடுத்தர வயதில் அந்தப் பெண் நின்றிருந்தாள்.

போட்டோவை ஏற்கெனவே பார்த்து இருந்ததால் அவள்தான் ஜெனிஃபர் என்பதைப் புரிந்து கொண்ட ஜெயச்சந்திரன் புரியாதது போல் முகத்தை வைத்துக்

கொண்டு கேட்டார்.

"மிஸஸ் ஜெனிஃபர்?"

"நான்தான்..."

"என்னோட பேர் ஜெகதீசன். லைஃப் இன்சூரன்ஸ் ஆபீஸர்...! உங்ககிட்டே கொஞ்சம் பேசணும்."

"என்ன பேசணும்?"

"உங்க கணவர் சாமுவேல் போன பத்து நாளைக்கு முன்னாடி இறந்துட்டதாய் எங்க அலுவலகத்துக்கு ஒரு லெட்டர் வந்தது."

"சரி..."

"அது சம்பந்தமாய் ஒரு க்ளாரிஃபிகேஷன்."

"என்ன க்ளாரிஃபிகேஷன்?"

"உங்க வீட்டுக்கு ஒரு பொறுப்பான அதிகாரி வந்தா இப்படித்தான் வாசலிலேயே பேசி அனுப்பிடுவீங்களா...?"

"ஸாரி... ப்ளீஸ் கம்...!" ஜெனிஃபர் சொல்லிவிட்டு உள்ளே போக ஜெயச்சந்திரன் அவளைப் பின்தொடர்ந்தார்.

பெரிய ஹால். நடுவில் நவீன மோஸ்தரில் சோபா. ஹாலின் சீலிங்கில் ஸாண்ட்லியர் லேம்ப்.

"உட்காருங்க...!" ஜெயச்சந்திரனுக்கு சோபாவைக் காட்டிவிட்டு ஜெனிஃபர் எதிரில் உட்கார்ந்தாள்.

"ம்.. சொல்லுங்க...!"

"டாக்டர் சாமுவேலை விட்டு லீகலாய் நீங்க பிரிஞ்சுட்டதாய் கேள்விப்பட்டோம். உண்மையா?"

"எஸ்... டைவோர்ஸ்."

"எப்ப டைவர்ஸ் ஆச்சு...?"

"பத்து வருஷத்துக்கு முந்தி."

"எதனால டைவர்ஸ்?"

"ரெண்டு பேர்க்கும் ஒத்துப் போகலை."

"அவர் இப்போ ரெண்டாவது கல்யாணம் பண்ணி கீதாராணி என்கிற பெண்ணோடு குடும்பம் நடத்திட்டு இருந்தது தெரியுமா?"

"கேள்விப்பட்டேன்."

"அவரோட மரணச் செய்தியைக் கேள்விப்பட்டும்

நீங்க சென்னைக்குப் போகலைன்னு தகவல்...! அது உண்மையா?"

"உண்மைதான்!"

"ஏன் போகலை?"

"பிடிக்கலை...!"

"இட்ஸ்... ஓ.கே! நான் இப்போ எதுக்காக வந்தேங்கிற விஷயத்தை சொல்லிடறேன். உங்க கணவர் சாமுவேல்...."

"ஸாரி... மாஜின்னு சொன்னாலே போதும்."

"இட்ஸ் ஓ.கே... உங்க மாஜி கணவர் சாமுவேல் ஆறு மாசத்துக்கு முன்னாடி ஒரு இன்சூரன்ஸ் பாலிஸி எடுத்து இருக்கார். பாலிஸியோட மதிப்பு எவ்வளவுன்னு தெரியுமா...?"

"சொன்னாத்தானே தெரியும்?"

"ஒரு கோடி..."

"சரி... அதுக்கென்ன இப்போ...?"

"பாலிஸி எடுத்தவர் யார் பேரை நாமினேட் பண்ணியிருக்கார் தெரியுமா? அதாவது தன்னுடைய இறப்புக்குப் பின்னால் ஒரு கோடி ரூபாய்ப் பணமும் யார் பேர்க்குப் போகணும்ன்னு மென்ஷன் பண்ணியிருக்கார் தெரியுமா?"

"அந்த கீதாராணி பேர்க்கா?"

"அதுதான் இல்லை... உங்க பேர்க்கு."

"என்னோட பேர்க்கு அவர் எதுக்காக எழுதி வைக்கணும். நான்தான் இப்போ அவரோட மனைவி இல்லையே?"

"நீங்க அப்படி சொன்னாலும் அவர் உங்களை மறக்காமே இருந்திருக்கார். அதுதான் உங்களை நாமினேட் பண்ணியிருக்கார். சட்டப்படி அவர் யாரோட பெயரை நாமினேட் பண்ணியிருக்காரோ அவர்க்குத்தான் அந்தப் பணம் போய்ச் சேரும்..."

ஜெனிஃபர் நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

"உங்க பேர் என்ன சொன்னீங்க?"

"ஜெகதீசன்!"

"இதோ பாருங்க... மிஸ்டர் ஜெகதீசன்...! அவரை நான் டைவோர்ஸ் பண்ணினதுக்கு காரணமே அவர்

நியாயமான முறையில் டாக்டர் தொழிலைப் பண்ணி பணம் சம்பாதிக்கலைங்கிறதுதான். டாக்டர் தொழில் ஒரு உன்னதமான தொழில். அதைக் களங்கப்படுத்தி பணம் சம்பாதிக்க வேண்டாம்னு நான் சொன்னதை அவர் ஒத்துக்கலை. நான் எத்தனையோதடவை வார்ன் பண்ணிப் பார்த்தேன். அவர் கேட்கலை. அவர் சம்பாதிச்ச அந்தப் பாவப்பட்ட பணத்துல சாப்பிட எனக்குப் பிடிக்கலை. டைவோர்ஸுக்கு அப்ளை பண்ணிட்டு என்னோட சொந்த ஊரான தூத்துக்குடிக்கு வந்துட்டேன். அவரைப் பார்க்கக் கூடாது, அவரோட முகத்துல விழிக்கக்கூடாதுன்னு என்னோட அம்மா வீட்ல வந்து உட்கார்ந்திருக்கேன். ஆனா அவர் இரண்டாவது கல்யாணம் பண்ணிகிட்டாலும் அவரால என்னை மறக்கமுடியலை. என்னைப் பார்க்க சென்னையிலிருந்து அடிக்கடி வந்துடுவார். நாம மறுபடியும் சேர்ந்து வாழலாம்ன்னு கெஞ்சுவார். நாள் முழுக்க வாசலிலேயே காத்திருப்பார். அப்புறம் போயிடுவார். ஆனா அவர் வெளியே போய் என்னோடு மறுபடியும் குடும்பம் நடத்தறதாய் சொல்லிட்டிருந் தார்ங்கிற விஷயமும் எனக்குத் தெரியும்."

"இட்ஸ் ஓகே... மிஸஸ் ஜெனிஃபர்...! நீங்க அவரோட மனைவி இல்லேன்னு சொன்னாலும் அவர் உங்களை மனைவியாய் நினைச்சுத்தான் நாமினேஷன் இடத்துல உங்க பேரைப் போட்டிருக்கார். நீங்க இந்த ஃபார்ம்ல ஒரு கையெழுத்து போட்டுக் குடுத்துட்டீங் கன்னா போதும், ஒரு வாரத்துக்குள்ளே ஒரு கோடி ரூபாய்க்கான செக் உங்க வீடு தேடி வந்துடும்."

"ஸாரி! எனக்கு அந்தப் பணம் வேண்டாம்."

"ஒரு கோடி ரூபாய்... மிஸஸ் ஜெனிஃபர்!"

"அது பத்துக் கோடியாகவே இருந்தாலும் சரி."

"நீங்க அந்தப் பணத்தை வேண்டாம்ன்னு சொன்னா நம்ம அரசோட கருவூலத்துக்குப் போயிடும்!"

"போகட்டும்! ஐ டோண்ட் பாதர்... நான் வேணும்ன்னா அந்த ஒரு கோடி ரூபாய்ப் பணம்

வேண்டாம்னு எழுதிக் குடுத்துடறேன். அதுக்கான ஃபார்ம்ஸ் ஏதாவது இருக்கா?"

"இருக்கு!"

"கொண்டாங்க... கையெழுத்துப் போட்டுக் குடுத்துடறேன்."

"நல்லா யோசனை பண்ணுங்க."

"இதுல யோசனை பண்ண ஒண்ணுமேயில்லை! ஃபார்ம் இப்பவேயிருந்தா குடுங்க. கையெழுத்து போட்டுக் குடுத்துடறேன்."

"நாளைக்கு ஃபார்ம் கொடு வரட்டுமா?"

"ம்... கொண்டு வாங்க!" ஜெனிஃபர் சொல்லிக் கொண்டிருந்த போதே மாடிப்படிகளில் ஒரு வயதான அம்மாள் மெள்ள இறங்கி வந்து கொண்டிருந்தாள். ஜெயச்சந்திரன் பார்த்துவிட்டுக் கேட்டார்.

"யார் அந்த அம்மா?"

"பேரு மீனாட்சி... மேலே இருக்கிற முதியோர் இல்லத்துல தங்கியிருக்காங்க...!"

ஜெயச்சந்திரனின் நெற்றி பெரியதொரு வியப்புக்கு உட்பட்டது. "என்ன சொன்னீங்க... மேலே முதியோர் இல்லமா?"

"ஆமா...! நான் கடந்த எட்டு வருஷமா நடத்திட்டு வர்ற 'தஞ்சம்' என்கிற முதியோர் காப்பகம் அது. எனக்கு டைவோர்ஸ் கிடைச்சதும் மேற்கொண்டு என்ன செய்யறதுன்னு எனக்குத் தெரியலை. என்னோட மீதி நாட்களைப் பயனுள்ள முறையில் கழிக்கணும்ன்னு நினைச்சேன். அப்போ தோணின இந்த எண்ணம்தான் 'தஞ்சம்' முதியோர் காப்பகம். பெற்ற மகன்களால் கைவிடப்பட்ட வயதான பெண்கள் பதினாறு பேரை மாடியில் தங்க வெச்சு அவங்களைப் பராமரிச்சுட்டு வர்றேன்...!"

ஜெயச்சந்திரன் வியப்பில் இருக்கும் போதே ஜெனிஃபர் எழுந்து அந்த வயதான பெண்ணை நோக்கிப் போனாள்.

"என்ன மீனாட்சியம்மா... ஏன் கீழே இறங்கி வர்றீங்க? உங்களுக்கு என்ன வேணும்?"

"தலைவலி மாத்திரை வேணும்மா...!"

"ரேணுகா எங்கே போனா?" ஜெனிஃபர் கேட்டுக் கொண்டிருக்கும் போதே ஹாலின் கோடியிலிருந்த ஒரு அறையில் இருந்து இளம் பெண் ஒருத்தி வெளிப்பட்டாள்.

"அம்மா! நான் கிச்சன்ல இருக்கேன்!"

"மீனாட்சியம்மாவுக்கு தலை வலிக்குதாம். ஒரு மாத்திரை எடுத்துக் குடு."

"இப்ப குடுத்துடறேம்மா!"

"லட்சுமி பாட்டிக்கு இப்போ காய்ச்சல் எப்படியிருக்கு!"

"பரவாயில்லேம்மா... காலையில ரெண்டு இட்லி சாப்பிட்டாங்க... மத்தியானம் ரசம் சாதம் குடுக்கலாம்னு இருக்கேன்...!"

"டாக்டர் பெருமாள்கிட்டே ஒரு வார்த்தை கேட்டுடு!"

"சரிம்மா!"

ஜெனிஃபர் மறுபடியும் ஜெயச்சந்திரனுக்கு எதிரே வந்து உட்கார்ந்தாள். "ஸாரி! என்ன பேசிட்டிருந்தோம்...?"

"அந்த ஒரு கோடி ரூபாய் இன்சூரன்ஸ் பாலிஸி?"

"எஸ்...எஸ்...! நாளைக்கு அந்த ஃபார்ம் கொண்டு வாங்க. கையெழுத்துப் போட்டுக் குடுத்துடறேன்."

"தொகை பெரிசு...! ரீ கன்ஸிடர் பண்ணுங்க."

"வெரி வெரி ஸாரி...! ஜீஸஸ் புண்ணியத்துல என்னோட ஃபாதரும் மதரும் எனக்கு நிறைய சொத்துக்களை விட்டுட்டுப் போயிருக்காங்க. யாருடைய பணமும் எனக்குத் தேவையில்லை."

"தென் இட்ஸ் ஓ.கே...! நான் புறப்படறேன்!" ஜெயச்சந்திரன் எழுந்தார்.

"ஏதாவது சாப்ட்றீங்களா... காப்பி, டீ, கூல்ட்ரிங்க்ஸ்?"

"நோ... தேங்க்ஸ்...!" ஜெயச்சந்திரன் விடைபெற்றுக் கொண்டு வெளியே வந்தார். பிரதான ரோட்டில் மரங்களின் நிழலில் நடந்து கொண்டே தன் செல்போனை உயிர்ப்பித்தார். கமிஷனர் குகநேசனை தொடர்பு கொண்டார்.

"ஸார்...! நான் ஜெயச்சந்திரன்..."

"என்ன... ஜெனிஃபர்கிட்டே பேசிட்டீங்களா?"

"பேசிட்டேன் ஸார்...! நீங்க சொல்லிக் குடுத்த மாதிரியே ஒரு எல்.ஐ.ஸி. ஆபீஸர் மாதிரி பேசினேன். 'எனக்கு ஒரு கோடி ரூபாய் வேண்டாம்'ன்னு சொல்லிட்டாங்க ஸார்."

"நிஜமாவா...?"

"ஆமா... ஸார்...! அப்புறம் இன்னொரு விஷயத்துல ஜெனிஃபர் ஈஸ் த க்ரேட் ஸார்...!"

"என்ன சொல்றீங்க?"

"ஜெனிஃபர் தன் வீட்டோட மாடிப்பகுதியை ஒரு முதியோர் இல்லமாய் மாத்தி அதுக்கு 'தஞ்சம்'ன்னு பேர் வெச்சு நடத்திட்டு வர்றாங்க ஸார். ஸோ என்னோட பார்வையில் ஜெனிஃபர் ஒரு ஜெம் ஸார்."

"என்ன ஜெயச்சந்திரன்...! உங்களைப் பேச விட்டா ஜெனிஃபர்க்கு தூத்துக்குடியிலேயே ஒரு பாராட்டு விழாவை நடத்திட்டுத்தான் வருவீங்க போலிருக்கு... பை...த...பை... வேற ஏதாவது யூஸ்ஃபுல் க்ளூ ஜெனிஃபர் கிட்டே பேசிட்டு இருக்கும்போது கிடைச்சுதா...?"

"எஸ்... ஸார்."

"என்ன?"

"டாக்டர் சாமுவேல் நியாயமான வழியில் பணத்தை சம்பாதிக்கலை. ஜெனிஃபர் சாமுவேலை டைவோர்ஸ் பண்ணியதே அந்தக் காரணத்துக்காகத் தான்!"

"வேற எந்த வழியில் அவர் பணம் சம்பாதிச்சாராம்?"

"ஜெனிஃபர் அதை சொல்ல மறுத்துட்டாங்க..."

"சரி... நீங்க சென்னை புறப்பட்டு வாங்க. ஒரு அதிர்ச்சியான விஷயம் உங்களுக்காக வெயிட் பண்ணிட்டிருக்கு!"

"என்ன ஸார்..?"

"உங்களுக்கு.... ஃப்ரண்ட் ஒருத்தர். பேரு குணசேகரன். கோயமுத்தூர் ரமணா நகர் பீட் போலீஸ் ஸ்டேஷனில் இன்ஸ்பெக்டராய் இருந்தாரே?"

"ஆமா... ஸார்....!"

"அவர் கொடூரமான முறையில் கொலை செய்யப்பட்டிருக்கார்."

"மை குட்னஸ்! எப்ப ஸார்?"

"நாலு நாளைக்கு முன்னாடி!"

"கொலையாளி யார் ஸார்?"

"தெரியலை...! இன்வெஸ்டிகேஷன் ஈஸ் கோயிங் ஆன். இது வரைக்கும் நடந்த விசாரணையில் ஒரு உண்மை மட்டும் வெளிப்பட்டிருக்கு."

"என்ன உண்மை ஸார்?"

"இன்ஸ்பெக்டர் குணசேகரனோட செல்போனை சைபர் க்ரைம் போலீஸ் ஆய்வு பண்ணினதில் அவர் கடந்த ரெண்டு வாரத்துல மட்டும் பத்து தடவை டாக்டர் சாமுவேலுக்கு போன் பண்ணி பேசியிருக்கார்."

"ஸார்! நீங்க சொல்றதைப் பார்த்தா டாக்டர் சாமுவேல் கொலைக்கும் இன்ஸ்பெக்டர் குணசேகரனின் கொலைக்கும் ஏதோ ஒரு தொடர்பு இருக்கும் போலிருக்கே!"

"யூ... ஆர் கரெக்ட் ஜெயச்சந்திரன்... இந்த ரெண்டு பேரையும் தீர்த்துக் கட்டினது ஒரே கொலையாளியாகக் கூட இருக்கலாம்!"

---

**செ**ல்போனில் ஏதாவது பிரச்னை என்றால் தடாலடியாய் ஏதாவது ஒரு செல்போன் சர்வீஸ் சென்டர்க்குப் போய் பழுது பார்க்கும்படி கொடுத்து விடாதீர்கள். செல்போன்களை சர்வீஸுக்கு கொடுக்கும் முன்பு நீங்கள் அதில் சேமித்து வைத்து இருக்கும் உங்கள் வீட்டு குடும்பப் பெண்களின் போட்டோக்களையெல்லாம் அழித்து விடுங்கள். முக்கியமாக மெமரி கார்டை எடுத்து வைத்துக் கொள்ளுங்கள். அதில் முக்கியமான தொடர்பு எண்களை உங்களுடைய கம்ப்யூட்டரில் பதிவு செய்து கொண்டு பின் சர்வீஸுக்கு கொடுங்கள். எல்லாவற்றுக்கும் மேலாக நன்கு அறிமுகமான - தெரிந்த நபர்களிடம் சர்வீஸுக்கு கொடுங்கள்.



7

"உம் பேர் என்ன?"

இன்ஸ்பெக்டர் கதிர் தனக்கு முன்பாய் கொஞ்சமும் பயப்படாமல் நின்றிருந்த அந்த திருநங்கையைப் பார்த்தபடி கேட்டார்.

5 3/4 அடி உயரத்தில் இருந்த அவள் தன்னுடைய மாராப்பை தேவையில்லாமல் இழுத்து விட்டுக் கொண்டு பெண்மையும் ஆண்மையும் கலந்த இரண்டும் கெட்டான் குரலில் "அகிலா" என்றாள்.

"இன்ஸ்பெக்டர் குணசேகரனை எதுக்காக கொலை செஞ்சே..?"

"நான் எதுக்காக அவரைக் கொலை செய்யணும்?"

"ராத்திரியில் தனியாய் வந்த குழலி என்கிற பெண்ணை நீ கடத்த முயற்சி பண்ணினதை குணசேகரன் தடுத்தாரா இல்லையா?"

"ஆமா தடுத்தார்!"

"அது ஒண்ணு போதுமே! உனக்கு கோபம் வந்து அவரைப் பின்தொடர்ந்து வந்து தீர்த்துக் கட்டிட்டே!"

"இதோ பார் ஸாரே! அந்தக் குழலிப் பொண்ணு அழகாய் இருக்காளேங்கிற ஒரே ஒரு காரணத்துக் காத்தான் அவளைக் கடத்திப் போய் ரெண்டு நாள் வெச்சிருந்து பணம் சம்பாதிக்கலாம்ன்னு பார்த்தேன். நான் நினைச்ச மாதிரி நடக்கலை. போலீஸ் கையில் சிக்கக் கூடாதுன்னு நினைச்சு உடனடியாய் எஸ்கேப் ஆயிட்டேன். ஆனாலும் அடுத்த ரெண்டு மணி நேரத்துக்குள்ளே ரோந்து போலீஸ் என்னை மடக்கிட்டாங்க...! போலீஸையெல்லாம் கொலை செய்யற அளவுக்கு நா ஒண்ணும் தாதா கிடையாது ஸார்... கண்ணுக்கு லட்சணமா ஒரு பொண்ணு கிடைச்சா மடக்குவோம். அவளை வெச்சு நாலு காசு சம்பாதிப்போம்... அவ்வளவுதான்!"

பக்கத்தில் நின்றிருந்த ஹெட் கான்ஸ்டபிள் கதிர்

அருகே குனிந்து காதருகே கிசுகிசுத்தார்.

"ஸார்!"

"என்ன?"

"நான் ஏற்கெனவே தரோவா விசாரிச்சுட்டேன் ஸார். இன்ஸ்பெக்டர் குணசேகரனைக் கொலை பண்ணினது இவளாய் இருக்க முடியாது ஸார்."

"அப்புறம் வேற என்ன மோட்டிவேஷன்...?"

கதிர் கேட்டுக் கொண்டிருக்கும்போது சப்-இன்ஸ்பெக்டர் சிவராமன் கையில் வயர்லஸ் போனோடு வந்தார்.

"ஸார்! லைன்ல ஏ.ஸி.பி....!"

கதிர் சற்றே பதட்டத்தோடு போனை வாங்கிக் கொண்டு முன் அறைக்குப் போய் ஒரு ஓரமாய் நின்று கொண்டு பேச ஆரம்பித்தார்.

"ஸ...ஸார்! நான் கதிர்...!"

மறுமுனையில் அஸிஸ்டெண்ட் கமிஷனர் ஆஃப் போலீஸ் திருவேங்கடம் பேசினார்.

"என்ன... அந்த திருநங்கை ஏதாவது சொன்னாளா?"

"தான் குணசேகரனைக் கொலை பண்ணலைன்னு தீர்மானமாய் சொல்றா..."

"நம்பறமாதிரி இருக்கா...?"

"அவ பண்ணியிருக்க வாய்ப்பில்லைன்னுதான் தோணுது."

"யூ மே பி கரெக்ட்...! இன்ஸ்பெக்டர் குணசேகரன் கொலை செய்யப்பட்டது இன்னொரு கொலையோடு 'லிங்க்' ஆகும் போலிருக்கு."

"என்ன ஸார் சொல்றீங்க...?"

"எஸ்! சென்னையில் சாமுவேல் என்கிற ஒரு டாக்டர் கொலை செய்யப்பட்டிருக்கார். அந்த சாமுவேலுக்கு குணசேகரன் கடந்த ரெண்டு வாரத்துல மட்டும் பத்து தடவை போன் பண்ணி பேசியிருக்கார். பேச்சோட விபரம் தெரியலை. ஆனா ஒவ்வொரு தடவை பேசும் போதும் 'டியூரேஷன்' அரைமணி நேரத்துக்கு மேலே போயிருக்கு."

"அப்படீன்னா ரெண்டு பேரும் ஏதோ விவாதம்

பண்ணியிருக்காங்க...!"

"எஸ்... என்னோட கெஸ் ஒர்க்கும் அதுதான் இன்னிக்கு ராத்திரி பத்து மணிக்கு சென்னையிலிருந்து அஸிஸ்டண்ட் கமிஷனர் ஜெயச்சந்திரன் கோயமுத்தூர் வர்றார். அவர்கிட்டே சில யூஸ்ஃபுல் க்ளூஸ் இருக்கு.... அதை வெச்சு நாம் டிஸ்கஸ் பண்ணப் போறோம். நீங்களும் வந்துடுங்க!"

"எஸ் ஸார்...!"

"அப்புறம்... இன்னொரு முக்கியமான விஷயம். இதை நீங்க வெளியே யார்கிட்டேயும் சொல்ல வேண்டாம். நான் சொல்ற இந்த வார்த்தையை நோட் பண்ணிக்குங்க!"

"சொல்லுங்க"

"திரிபுரம்."

"எதுக்காக ஸார் இந்த வார்த்தை?"

"தெரியலை...! ஆனா கொலையுண்ட குணசேகரனுக்கும் இந்த வார்த்தைக்கும் ஏதோ ஒரு தொடர்பு இருக்கு... இதை ரகசியமாய் இன்வெஸ்டிகேட் பண்ணுங்க...!"

"எஸ்... ஸார்..."

"ராத்திரி பத்து மணிக்கு கமிஷனர் ஆபிஸ்ல சந்திப்போம்."

"எஸ். ஸார்!" கதிர் வயர்லஸ் போனை அணைத்து விட்டு இடது கை விரல்களால் நெற்றியைத் தேய்த்து விட்டுக் கொண்டார்.

'திரிபுரம்!'

'அது என்ன?'

---

ஃபேஸ்புக் என்பது இன்றைக்கு மிகவும் பிரபலம். எண்ணங்களை பரஸ்பரம் பகிர்ந்து கொள்ள இணையதளம் நமக்கு வழங்கியிருக்கும் வரப்பிரசாதம். ஆனால் ஃபேஸ்புக்கிலும் புல்லுருவி ஆசாமிகள் இருக்கிறார்கள் என்பதை நாம் உணர்ந்து செயல்பட வேண்டும். முன்பின் தெரியாதவர்களை ஃபேஸ்புக் நண்பர்கள் லிஸ்டில் சேர்ப்பதற்கு முன்பு அவர்க்குள்ள 'MUTUAL FRIENDS' யார் என்பதைப்

பார்த்து CONFIRM செய்ய வேண்டும். ஒரு நபரை கன்ஃபார்ம் செய்த பிறகு அவரால் பிரச்னை எழும் சூழ்நிலை உருவாகும் போல் தோன்றினால் அந்த நபர்களை உடனடியாய் டெலிட் செய்துவிடுவது நல்லது. அதே போல் ஃபேஸ்புக்கில் எழுதும்போது கவனமாக எழுத வேண்டும். ஏனென்றால் நாம் எழுதும் ஒவ்வொரு வார்த்தையும் ஒரு விநாடி நேரத்திற்குள் லட்சக்கணக்கான பேர்களைப் போய்த் தொட்டுவிடும்.




ராத்திரி பத்து மணி.

கோவையின் கமிஷனர் அலுவலகம்.

சென்னையின் ஏசிபி ஜெயச்சந்திரனும், கோவையின் ஏசிபி திருவேங்கடமும் அருகருகே உட்கார்ந்திருக்க, எதிரில் இன்ஸ்பெக்டர் கையில் ஒரு ஃபைலோடு நிமிர்ந்து உட்கார்ந்திருந்தார்.

ஜெயச்சந்திரன் பேசிக் கொண்டிருந்தார்.

"மிஸ்டர் கதிர்! இன்ஸ்பெக்டர் குணசேகரனின் கொலை வழக்கை விசாரிக்கிறதால உங்க கிட்டே சில விபரங்களைச் சொல்ல வேண்டியிருக்கு. இந்த பேப்பர்ல ஒட்டப்பட்டு இருக்கிற போட்டோவைப் பாருங்க."

கதிர் வாங்கிப் பார்த்தார்.

அது ஒரு மூக்கின் படம்.

"எ...என்ன ஸார் இது?"

"உங்களுக்கு அது எது மாதிரி தெரியுது?"

"ஒரு போட்டோவிலிருந்து வெட்டி எடுக்கப்பட்ட மூக்கோட படம் மாதிரி தெரியுது"

"அதே தான்! இந்த மூக்கோட போட்டோ சென்னை போலீஸ் கமிஷனர்க்கு அனுப்பப்பட்ட ஒரு கவர்க்குள் இருந்தது. அந்த போட்டோவுக்கு கீழே எழுதப்பட்டு இருக்கிற வாசகங்களைப் படிங்க!"

கதிர் அந்த வாசகங்களைப் படித்து விட்டு

நிமிர்ந்தார். "இது கொலையாளியோட மூக்குன்னு லெட்டர்ல குறிப்பிட்டு இருக்காங்க ஸார்"

"இந்த வாசகங்கள் உண்மையாய் இருக்கும்ன்னு நினைக்கறீங்களா கதிர்...?"

"ஸாரி ஸார்... நோ ஐடியா..."

"சரி... இந்த போட்டோ மூக்கு ஒரு ஆணோடதா பெண்ணோடதா...?"

கதிர் உற்றுப் பார்த்துவிட்டு "ஒரு ஆணோட மூக்கு மாதிரிதான் தெரியுது ஸார்" என்றார்.

ஜெயச்சந்திரன் சிரித்தார். "இந்த போட்டோவை இதுவரைக்கும் பதினோரு ஃபாரன்ஸிக் அதிகாரிகளிடம் காட்டி 'இது ஆணோட மூக்கா... பெண்ணோட மூக்கா'ன்னு கேட்டோம். ஆறு பேர் பெண்ணோட மூக்குன்னு சொன்னாங்க. அஞ்சு பேர் ஆணோட மூக்குன்னு சொன்னாங்க. இப்ப நீங்க இதை ஆணோட மூக்குன்னு சொன்னதால ரெண்டு கெஸ் ஒர்க்கும் சரிசமமான நிலைமைக்கு வந்திருக்கு..."

"ஸார்! இந்த விஷயத்துல எனக்கு ஒரு சந்தேகம்!"

"என்ன...?"

"இந்த லெட்டரை அனுப்பிய நபரோட நோக்கம் கொலையாளி இவர்தான்னு காட்டிக் கொடுப்பது இல்லை ஸார்."

"பிறகு?"

"கேஸை வலுக்கட்டாயமாய் வேற பக்கம் திரும்பி போலீஸை டைவர்ட் பண்றாங்கன்னு நினைக்கிறேன்"

"நீங்க அப்படி நினைக்க என்ன காரணம்?"

"ஸாரி ஸார்... என்னால அப்படி நினைக்கத்தான் முடியுது. காரணத்தை சொல்ல முடியலை."

"இட்ஸ் ஓ.கே... கொலையுண்ட குணசேகரனுக்கும் சாமுவேலுக்கும் இடையில் நடந்த செல்போனிக் கான்வர்சேசனில் இந்த ஒரு பகுதியை மட்டும்தான் அந்தக் குறிப்பிட்ட செல்போன் கம்பெனியால் பதிவு பண்ணிக் கொடுக்க முடிந்தது... இதைக் கொஞ்சம் 'ஹியர்' பண்ணிப் பாருங்க...!" சொன்ன ஜெயச்சந்திரன் தன்னிடம் இருந்த ஸ்மார்ட் கார்ட் செல்போனை உயிர்ப்பித்தார்.

சில விநாடிகளுக்குப் பிறகு -

இரண்டு ஆண்குரல்கள் கரகரத்தன.

"நேத்து உங்க போனை எதிர்பார்த்தேன் டாக்டர்"

"ஸாரி குணசேகரன்....! நேத்து ஹாஸ்பிட்டல்ல ரெண்டு ஆக்ஸிடெண்ட் கேஸ்... போஸ்ட் மார்ட்டம் ஃபார்மாலிடீஸை யெல்லாம் முடிச்சுட்டு வீடு திரும்பும்போது ராத்திரி பதினோரு மணி"

"சரி! திரிபுரம் நிலவரம் என்ன?"

"பயப்படற மாதிரி ஒண்ணும் இல்லை..."

"நாம எச்சரிக்கையாய் இருக்கிறது நல்லது..."

"இதோ பாருங்க குணசேகரன்...! நீங்க காக்கி யூனிஃபார்ம். நான் வெள்ளைக் கோட்டு. எதுக்கும் பயப்பட வேண்டியது இல்லை."

"பயப்படற மாதிரி ஒரு சம்பவம் நடந்த காரணத்தாலதான் நான் கொஞ்சம் ஆடிப் போயிருக்கேன்"

"பயப்படறமாதிரி என்ன சம்பவம் நடந்தது?"

"என்ன டாக்டர் தெரியாத மாதிரி கேட்கறீங்க... ஜே.பி.யோட நிலைமை என்னாச்சுன்னு தெரியாதா?"

"ஆறுமாசத்துக்கு முன்னாடி நடந்த ஆக்ஸிடெண்ட் தானே?"

"ஆமா."

"அதை நினைச்சு பயப்பட வேண்டிய அவசியம் என்ன?"

"அது நிஜம்மாலுமே ஆக்ஸிடெண்ட் தானா?"

"அதுல உங்களுக்கு என்ன சந்தேகம்?"

"மனசுக்குள்ளே ஏதோ ஒரு பொறி தட்டிச்சு..."

"அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்."

"நாம பயப்பட்டாலும் பரவாயில்லை. அலட்சியமாய் இருக்கக் கூடாது."

"வீண் பயம் இருக்கிற சந்தோஷத்தைக் கெடுத்துடும். இனி வரப் போகிற நாட்களையும் நரகமாக்கிடும். தைரியமாய் இருங்க. கால

வெள்ளத்துல எல்லாமே காணாமல் போயிடும்!"

செல்போனிக் கான்வர்சேஷன் நின்றுபோக - அறையில் மௌனம் நிலவியது. ஜெயச்சந்திரன் கேட்டார்.

"இன்ஸ்பெக்டர் குணசேகரனுக்கும் டாக்டர் சாமுவேலுவுக்கும் நடந்த கான்வர்சேஷனைக் கேட்டீங்களா மிஸ்டர் கதிர்?"

"கேட்டேன் ஸார்."

"என்ன புரிஞ்சுகிட்டீங்க?"

"குணசேகரனுக்கும் சாமுவேலுவுக்கும் பின்னாடி ஏதோ ஒரு ஃப்ளாஷ்பேக் இருக்கு ஸார்."

"எஸ்...! அந்த ஃப்ளாஷ்பேக்ல ஜே.பி.ன்னு ஒரு கேரக்டர் வருது. அந்த கேரக்டர் ஒரு ஆக்ஸிடெண்ட்ல இறந்து போயிருக்கிறதும் தெரிய வருது..."

"யார் அந்த ஜே.பி.ன்னு கண்டுபிடிச்சுட்டா இந்த இருட்டான கேஸில் சின்னதாய் ஒரு வெளிச்சம் கிடைக்கும்... ஸார்."

"ஆக்ஸிடெண்ட் என்னிக்கு நடந்ததுன்னு தெரியலையே? போன வருஷமா... இல்லை பத்து வருஷத்துக்கு முந்தியா?"

"கடந்த பத்து வருஷ காலத்திலிருந்து பார்த்துட வேண்டியதுதான்...! நான் இந்த பொறுப்பை எடுத்துக்கறேன் ஸார்."

"ஜே.பி. ன்னு வெறும் இன்ஷியல் மட்டும் இருக்கு. ஆக்ஸிடெண்ட்டான நபரைக் கண்டு பிடிக்கிறது கொஞ்சம் கஷ்டம்."

"நிறையவே கஷ்டப்பட்டாலும் நோ ப்ராப்ளம் ஸார். இந்த கான்வர்சேஷனை நான் என்னோட செல்போன்ல பதிவு பண்ணிக்கலாமா?"

"தாராளமாய்!"

ஜெயச்சந்திரன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அருகில் உட்கார்ந்திருந்த ஏ.சி.பி. திருவேங்கடத்துக்கு அந்த செல்போன் அழைப்பு வந்தது.

திருவேங்கடம் செல்போனை எடுத்து இடது

காதுக்கு ஒற்றினார்.

"எஸ்!"

ஒரு ஆண்குரல் மறுமுனையில் சிரிப்போடு கேட்டது.

"என்ன திருவேங்கடம் ஸார்...! கொலையாளியைப் பிடிக்கிறதுக்கான டிஸ்கஷன் மும்முரமாய் போயிட்டிருக்கு போலிருக்கு...?"

"யார் நீ...?"

"உங்களுக்கு நான் யார்ங்கிறது முக்கியமா... இல்லை... கொலையாளி யார்ன்னு தெரியறது முக்கியமா....?"

திருவேங்கடம் பதில் பேசாமல் மௌனிக்க, அவன் சிரித்தான்.

"இதோ பாருங்க திருவேங்கடம் ஸார்... நான் இப்போ பேசிட்டு இருக்கிற செல்போன் நம்பரை ட்ரேஸ் பண்றதினாலேயோ, என்னோட பேச்சை மானிட்டர் பண்றதினாலேயோ ஒரு பிரயோஜனமும் இல்லை. இது ஒன் டைம் யூஸேஜ் சிம்கார்ட். இந்த நிமிஷம் பேசிட்டு அடுத்த நிமிஷமே தூக்கி யெறிஞ்சுட்டு போயிட்டிருப்பேன்."

"சரி... சொல்லு... கொலையாளி யாரு?"

"மொதல்ல ரூமை விட்டு வெளியே வாங்க... அப்படியே பொடி நடை போட்டு கமிஷனர் ஆபீஸுக்குப் பின்னாடி இருக்கிற வேப்பமரத்துக்குப் பக்கத்தில் இருக்கிற காம்பௌண்ட் சுவர்க்கு வாங்க. அந்த சுவர் மேல ஒரு செங்கல்லுக்கு கீழே உங்களுக்குத் தேவையான தகவல் ஒண்ணு வெயிட்டிங்கில் இருக்கு!"

பேச்சு சட்டென்று அணைந்து போக திருவேங்கடம் வேகமாய் எழுந்தார். ஜெயச்சந்திரனிடமும், கதிரிடமும் விஷயத்தைச் சொல்லி விட்டு அறையினின்றும் வெளியேறினார்.

ஒரு நிமிஷ வேக நடை.

கட்டிடத்தின் பின்புறம் வந்தது. வேப்பமரத்தை ஒட்டியதுபோல் இருந்த காம்பௌண்ட் சுவரின் மேல் ஒரு செங்கல் தெரிந்தது.

நெருங்கினார்.

செங்கல்லுக்கு கீழே -

மடித்து வைக்கப்பட்டிருந்த அந்தக் காகிதம் தெரிந்தது. எடுத்துக்கொண்டு காம்பௌண்ட் சுவர்க்குப் பின்புறம் தெரிந்த சாலையைப் பார்த்தார். சாலை போக்குவரத்தின்றி கூட்டிப் பெருக்கியது போல் சுத்தமாய் தெரிய ஆள் நடமாட்டம் அறவே இல்லை....

திருவேங்கடம் அந்தக் காகிதத் துண்டோடு அறைக்கு வந்து பிரித்தார். ஏ ஃபோர் அளவில் இருந்த அந்தக் காகிதத்தில் இரண்டு போட்டோ துணுக்குகள் ஒட்டப்பட்டு இருந்தன.

திருவேங்கடம் அவைகளைப் பார்த்துவிட்டு முகம் மாறினார்.

போட்டோவினின்றும் வெட்டி எடுக்கப்பட்ட இரண்டு மனிதக் காதுகள் தெரிந்தன. கீழே நான்கு வரிகள்.

**நீங்கள் இப்போது பார்த்துக் கொண்டு இருப்பது கொலையாளியின் இரண்டு காதுகள். கொலையாளி யார் என்று கண்டுபிடிக்க முடிகிறதா? முடியாவிட்டால் இன்னும் நான்கைந்து நாட்கள் காத்திருங்கள்.**

இண்ட்டர்நெட் சம்பந்தமான சைபர் க்ரைம் குற்றத்தில் ஒரு நபர் கைது செய்யப்பட்டு அந்தக் குற்றம் நிரூபிக்கப்பட்டால் தண்டனைகள் கடுமையாக இருக்கும் வகையில் சட்ட விதிகள் இயற்றப்பட்டுள்ளன. பெண்களின் ஆபாசப் படங்களை வெளியிடுவது போன்ற குற்றத்தை ஒருவர் செய்தால் அவர் ஜாமீனில் வெளியே வர முடியாது. வழக்கு முடிந்து தீர்ப்பு வெளியாகும் வரை அவர் சிறையிலேயே இருக்க வேண்டியதுதான். 2008-ம் வருஷம் இயற்றிய சட்டப்படி 5 ஆண்டுகள் முதல் 10 ஆண்டுகள் அல்லது உச்சபட்சமாக ஆயுள் தண்டனை வரை தண்டனை கிடைக்க வாய்ப்புள்ளது.




சட்டத்துறை அமைச்சர் நவநீதகிருஷ்ணனின் கார் அந்த உயர்தர ஹாஸ்பிடலின் போர்டிகோவில் வந்து நின்றதுமே, காத்திருந்த நிருபர்கள் சூழ்ந்து கொண்டார்கள்.

நவநீதகிருஷ்ணன் சற்றே எரிச்சல் பட்டாலும் அதைக் காட்டிக் கொள்ளாமல் உதட்டுக்கு ஒரு புன்னகையைக் கொடுத்தார்.

"கோட்டைக்குப் போனாலும் வந்துடறீங்க... ஹாஸ்பிடல்ல அட்மிட்டாகியிருக்கிற ஒரு சக - அமைச்சரைப் பார்த்து நலம் விசாரிக்க வந்தாலும் வந்துடறீங்க. இப்ப உங்களுக்கு என்ன வேணும்?"

"ஒரு சின்ன பேட்டி ஸார்."

"அஞ்சே அஞ்சு நிமிஷம்தான். பைபாஸ் சர்ஜரி பண்ணியிருக்கிற உணவுத்துறை அமைச்சரைப் பார்த்து நலம் விசாரிச்சுட்டு நான் உடனடியாக டெல்லி போகணும். என்ன கேள்வி கேக்கணுமோ... சீக்கிரமாய் கேளுங்க!"

"ஸார்! தமிழ்நாட்ல இப்ப சட்டம் ஒழுங்கு ரொம்பவும் மோசமாய் இருக்கிறதாய் எதிர்க்கட்சித் தலைவர்கள் குற்றம் சாட்டறாங்க. அது குறித்து நீங்க என்ன சொல்ல விரும்பறீங்க ஸார்...?"

"என்னது! தமிழ் நாட்ல சட்டம் ஒழுங்கு கெட்டுப் போச்சா? எதிர்க்கட்சித் தலைவர்கள் சொல்றாங்களா?"

"ஆமா...ஸார்!"

"இனிமே கெடாமே பார்த்துக்குவோம்!"

"எப்படி ஸார்...?"

"சட்டம் ஒழுங்கு கெடாமே இருக்கணும்ன்னா அதைத் தூக்கி ஃப்ரிஜ்ல வெச்சுட வேண்டியதுதான்!"

"ஸார்! இது சீரியஸான கேள்வி!"

"நானும் சீரியஸாய்த்தான் பதில் சொல்லிட்டிருக்கேன். இப்போ தமிழ்நாட்டில்

எதிர்க்கட்சிகள் எல்லாமே ஒரு காலத்தில் ஆளும் கட்சிகளாய் இருந்தவைதான். அவர்கள் ஆட்சி செய்த போது தமிழ்நாட்டில் சட்டம் ஒழுங்கு கெடவே இல்லை. காரணம் அவங்க அந்த சட்டம் ஒழுங்கை கெட்டுப் போகாமே இருக்கிறதுக்காக ஃப்ரிஜ்ல வெச்சு பாதுகாத்துட்டு வந்தாங்க. நானும் இனிமே அதைத்தான் பண்ணப்போறேன். நீங்க வேணும்ன்னா பாருங்க. நாளையிலிருந்து சட்டம் ஒழுங்கு கெடவே கெடாது!"

"ஸார்! உங்க கேலியும் கிண்டலும் ரசிக்கிற மாதிரி இல்லை. காரணம், இந்த ஒரு வாரத்துக்குள்ளே குணசேகரன் என்ற போலீஸ் இன்ஸ்பெக்டர் கோவையில் கொடூரமாய் கொல்லப்பட்டிருக்கார். சென்னையில் டாக்டர் சாமுவேல் நடைப் பயிற்சிக்காகப் போன போது அருகம்புல் ஜூஸில் விஷம் கலந்து குடுத்து கொலை செய்யப்பட்டிருக்கார். இது மாதிரியான சம்பவங்கள் எல்லாம் சட்டம் ஒழுங்கை பதம் பார்க்கிற விஷயங்கள் அல்லவா?"

நடந்து கொண்டிருந்த அமைச்சர் நவநீதகிருஷ்ணன் சட்டென்று நின்று கேள்வி கேட்ட நிருபரை ஏறிட்டார்.

"தம்பி! உன் பேர் என்ன?"

"பூவரசு."

"எந்தப் பத்திரிகையில் வேலை பார்க்கிறே?"

"தீச்சுடர்."

"காரசாரமான அரசியல் பத்திரிகை. நாட்ல ஊழலே இருக்கக்கூடாதுன்னு சொல்ற பத்திரிக்கை. சரியா?"

"அதுதான் ஸார்... எங்க பத்திரிகையோட கொள்கை."

"பத்திரிகை ஆரம்பிச்சு எத்தனை வருஷமாகிறது?"

"பொன் விழாவை நெருங்கிட்டோம் ஸார்."

"கடந்த 50 வருட காலமாய் ஊழலை ஒழிக்கணும்ன்னு போராடறீங்க. உங்களால ஊழலை ஒழிக்க முடிஞ்சுதா...?"

"இல்லை."

"அதே மாதிரிதான் இந்த சட்டமும் ஒழுங்கும்...! ஆறுகோடி பேர் இருக்கிற தமிழ்நாட்ல அங்கே இங்கேன்னு ரெண்டொருத்தர் வெட்டிகிட்டு சாகத்தான் செய்வாங்க... அவனவனுக்கு ஆயிரம் பிரச்னை. கட்டின பொண்டாட்டியிலிருந்து பக்கத்து வீட்டுக்காரன் வரை யார்கிட்டேயும் சுமுகமான உறவு கிடையாது. எல்லார்க்கும் ரோஷம் மானம் ஜாஸ்தி. எவனும் எவனுக்கும் தாழ்ந்து போகமாட்டான். இதுல கிராமத்துப் பக்கம் பங்காளிப் பகை, வரப்பு சண்டை, கோயில்ல யார் முதல்ல கும்பிடறதுனு ஈகோ. நாட்ல சட்டம் ஒழுங்கு நல்லாத்தான் இருக்கு. ஜனங்கதான் சரியில்லை..."

பேசிக்கொண்டே லிஃப்ட் அருகே வந்தார் அமைச்சர் நவநீத கிருஷ்ணன். "நாளைக்கு பிரஸ்மீட்ல நிறைய பேசுவோம். இன்னிக்குப் புறப்படறீங்களா...?"

"ஸார்! ஒரே ஒரு கேள்வி"

"என்ன?"

"டெல்லி பயணம் எதுக்காக...?"

"ப்ரைம் மினிஸ்டர் போஸ்ட் தர்றாங்களாம். போய் வாங்கிட்டு வந்துடறேன்...."

நிருபர்கள் எல்லோரும் சிரிக்க, நவநீதகிருஷ்ணன் தன் உதவியாளரிடம் திரும்பினார்.

"பசுபதி! எத்தனையாவது மாடி?"

"நாலாவது ஸார்."

"வாய்யா உள்ளே."

உதவியாளர் லிஃப்ட்டுக்குள் நுழைந்தார். பட்டனை அழுத்த, லிஃப்ட் உயர்ந்தது. பத்தே விநாடிகளில் லிஃப்ட் நான்காவது மாடியைத் தொட்டது. கதவு விலக - வெளிப்பட்டார்கள். திகைத்தார்கள்.

நேர் எதிரேயிருந்த பில்லரின் மறைவிலிருந்து ஒருவன் சட்டென்று உற்பத்தியானான்.

கையில் துப்பாக்கி.

மைக்ரோ விநாடி வேகத்தில் சுட்டான்.

'ட்டப்ப்ப்'

அதிகம் சத்தம் போடாத துப்பாக்கி.

தோட்டா உதவியாளரை மன்னித்துவிட்டு, நவநீத கிருஷ்ணனின் மார்பைச் சிவப்பாக்கியது.

அவர் முன்புறமாய் கவிழ்ந்தார்.

**ந**ம் நாட்டோடு வெளி நாடுகளை ஒப்பிடும்போது சைபர் க்ரைம் குற்றங்கள் அதிகம் இல்லை. அப்படியே சைபர்க்ரைம் குற்றங்கள் நடந்தாலும் 20% அளவுக்குத்தான் புகார்களாக காவல் நிலையங்களில் பதிவாகின்றன. புகார் கொடுத்த பிறகு பிரச்னைகளை எதிர்கொள்ள நடுத்தர வர்க்க குடும்பத்தினர் பயப்படுவதுதான் காரணம். இண்ட்டர்நெட்டில் பண மோசடிகள் மிகுதியாக நடைபெறுகின்றன. இந்தியாவில் மட்டும் 5 பில்லியன் டாலர் அளவுக்கு பண மோசடிகள் நடப்பதாக இண்ட்டர்போல் சைபர் க்ரைம் தெரிவித்துள்ளது.



# 10

**எ**ல்லா டி.வி. சானல்களிலும் நியூஸ் ரீடர்கள் நன்றாக நிமிர்ந்து செய்தி வாசித்துக் கொண்டிருந்தார்கள்.

"தமிழகத்தின் சட்ட அமைச்சர் நவநீத கிருஷ்ணன் இன்று மாலை கொடூரமான முறையில் சுட்டுக் கொலை செய்யப்பட்டார். நகரின் பிரதான மையத்தில் இருந்த தனியார் மருத்துவமனை ஒன்றில் அனுமதிக்கப்பட்டிருந்த உணவு அமைச்சர் கதிர்வேலனை உடல் நலம் விசாரிக்கச் சென்ற அமைச்சர் நவநீதகிருஷ்ணன் லிஃப்டில் பயணித்து மருத்துவமனையின் நான்காவது மாடிக்கு சென்றார். நான்காவது மாடியில் லிஃப்ட் நின்று அவரும் அவருடைய உதவியாளர் சண்முகமும் லிஃப்டினின்றும் வெளிப்பட்ட போது மாடியின் வராந்தாவில் ஒரு தூணுக்குப் பின்னால் நின்றிருந்த மர்ம நபர் ஒருவர் திடீரென்று வெளிப்பட்டு நவநீத கிருஷ்ணனை

நோக்கி சுட்டார். தோட்டா நெஞ்சில் பாய்ந்து ரத்த வெள்ளத்தில் சாய்ந்த நவநீத கிருஷ்ணனை அதே ஹாஸ்பிடலில் சேர்த்து தீவிர சிகிச்சையளித்தும் சிகிச்சை பலனின்றி அடுத்த சிலநிமிடங்களிலேயே அமைச்சர் மரணமடைந்தார். சட்ட அமைச்சர் ஒருவரே இப்படி படுகொலை செய்யப்பட்டு இருப்பது தமிழ்நாட்டையே அதிர்ச்சியில் உறைய வைத்துள்ளது.

இது குறித்து நம்முடைய தொலைக்காட்சியின் சிறப்புச் செய்தியாளர் கோவேந்தன் சம்பவ இடத்திலிருந்து தரும் பிரத்யேகத் தகவல்களை இனி பார்ப்போம்."

நியூஸ் ரீடர் இப்போது தன் காதில் பொருத்தியிருந்த மைக்ரோ ரிஸீவரை சரிப்படுத்திக் கொண்டு பேச ஆரம்பித்தாள்.

"கோவேந்தன்! இப்போ நீங்க எங்கே இருக்கீங்க?"

"சம்பவம் நடந்த ஹாஸ்டலின் பிரதான வாயிலுக்கு முன்னாடி நின்னுட்டு இருக்கேன்."

"இப்போ... அங்கே நிலைமை எப்படியிருக்கு...?"

"ஒரு பரபரப்பான சூழ்நிலையில் இருக்கு. ஆளும் கட்சித் தொண்டர்கள் ஹாஸ்பிடலுக்கு முன்னாடி ஆயிரக் கணக்கில் கூடியிருக்காங்க..."

"போலீஸார் கொலையாளியைப் பிடிச்சுட்டாங்களா?"

"இல்லை.... அமைச்சரை சுட்டுட்டு தப்பியோடிய நபரை மாடிப்படிகள் வழியாய் ஏறிவந்த போலீஸார் பிடிக்க முயற்சி பண்ணியும் அவனைப் பிடிக்க முடியலை.... கண்காணிப்பு காமிராவால் பதிவு செய்யப்பட்டு இருந்த அந்த நபரின் போட்டோவைப் பார்த்த போது அவன் தன்னுடைய முகத்துக்கு துணியாலான மாஸ்க் ஒண்ணை மாட்டியிருந்தது தெரிய வந்தது. இந்தக் கொலைச்சம்பவம் ஒரு நிமிஷ நேரத்துக்குள்ளே நடந்து முடிஞ்சதாலே போலீஸ் அதிர்ந்து

போயிருக்காங்க...!"

"எதற்காக இந்தக் கொலை...?"

"மூணு விதமான காரணங்களைச் சொல்றாங்க..."

"என்னென்ன காரணங்கள்?"

"முதல் காரணம்: சட்ட அமைச்சர் நவநீதகிருஷ்ணனுக்கு இரண்டு மனைவிகள். அவங்க ரெண்டு பேர்க்குமே தனித்தனி வீடுகள் இருந்தாலும் ஒரு உட்பகை உள்ளுக்குள்ளேயே இருந்துட்டு வந்திருக்கு. சமீபத்துல அவர் வாங்கின ஒரு பெரிய சொத்து விஷயமாய் கருத்து வேறுபாடு ஏற்பட்டு முதல் மனைவியோட வாரிசுகளுக்கும் இரண்டாவது மனைவியோட வாரிசுகளுக்கும் மோதல் ஏற்பட்டிருக்கு. இந்த மோதலின் அடிப்படையில் இந்தக் கொலைச் சம்பவம் நடந்து இருக்கலாம்."

"சரி... இரண்டாவது காரணம்?"

"சமீபத்துல எதிர்க்கட்சித் தலைவர் ஒருத்தரோட அந்தரங்க வாழ்க்கையைப்பற்றி நவநீதகிருஷ்ணன் ஒரு கொச்சையான கருத்தை வெளிப்படுத்தியிருந்தார். அது மிகப் பெரிய அளவில் எதிர்க்கட்சித் தொண்டர்களைக் கொதிப்படைய வெச்சிருக்கு. எதிர்க்கட்சித் தொண்டர்களில் யாராவது உணர்ச்சி வசப்பட்டு இந்த முடிவுக்கு வந்து இருக்கலாம்."

"மூணாவது காரணம்?"

"உட்கட்சிப் பூசல். இவர்க்குப் பிடிக்காத செயலாளர்களையும் மாவட்ட செயலாளர்களையும் முதலமைச்சர் கிட்டே போட்டுக் கொடுத்து பதவி இறக்கம் செய்யறது நவநீதகிருஷ்ணனோட வாடிக்கையான வேலை. இவரால பாதிக்கப்பட்ட வட்ட செயலாளரோ மாவட்ட செயலாளரோதான் கூலிப்படை ஆளை வெச்சு போட்டுத் தள்ளிட்டதாய் பேசிக் கொள்கிறார்கள். இந்த மூன்றில் எது உண்மையான காரணம் என்பது அடுத்த இரண்டு நாட்களுக்குள் தெரியும்."

"சம்பவ இடத்துல இப்போ நிலைமை எப்படியிருக்கு?"

"கட்டுப்பாட்டுக்குள்ளே இருக்கு... அசம்பா விதங்கள் எதுவும் நடைபெறாமல் இருக்கிறதுக்காக ஹாஸ்பிடலைச் சுற்றிலும் போலீஸ் குவிக்கப்பட்டு இருக்கு. டி.ஜி.பி., போலீஸ்கமிஷனர் எல்லாரும் ஸ்பாட்லதான் இருக்காங்க."

"அவங்ககிட்டே பேச முடியுமா?"

"பக்கத்துல கூட போக முடியாது. எல்லாரும் ஒருவிதமான பதட்டத்தோடு இருக்காங்க...!"

"சரி... அமைச்சரோட பாடி பி.எம். பண்ண ஜி.ஹெச்சுக்கு போயாச்சா?"

"போயாச்சு.."

"போலீஸ் அங்கே யாரையாவது விசாரணை பண்ணிட்டு இருக்காங்களா?"

"அமைச்சரோட உதவியாளர் பசுபதியை போலீஸார் கட்டம் கட்டியிருக்காங்க..."

"அவர்க்கு இந்தக் கொலையில் பங்கு இருக்கும்ன்னு நினைக்கறாங்களா?"

"அப்படித்தான் தோணுது!"

"ரொம்பவும் நன்றி கோவேந்தன்.... நம்முடைய டி.வி. நேயர்களுக்காக நீங்கள் கொடுத்த தகவல்களுக்கு ரொம்பவும் நன்றி."

கோவை ஹோட்டலில் தங்கியிருந்த ஜெயச்சந்திரன் பார்த்துக் கொண்டிருந்த டி.வி.யை ரிமோட் கண்ட்ரோலால் அணைத்துவிட்டு தன் செல்போனை எடுத்து ஹாட் லைன் ஆப்ஷனுக்கு வந்து ஒரு எண்ணை அழுத்தினார். மறுமுனையில் ரிங் போய் ரிஸீவர் எடுக்கப்பட்டது.

மறுமுனையில் சென்னையின் கமிஷனர் குகநேசன் பேசினார்.

"சொல்லுங்க... ஜெயச்சந்திரன்...!"

"ஸார்! நீங்க இப்போ எங்கே இருக்கீங்க...?"

"சட்ட அமைச்சர் நவநீதகிருஷ்ணன் சுடப்பட்ட பிரச்னையில் உண்மை அறியும் பொருட்டு ஒரு அவசர

மீட்டிங். அதுக்காக போயிட்டிருக்கேன்."

"ஸார்! நான் இப்போ கோவையிலிருந்து பேசறேன். சட்ட அமைச்சர் நவநீதகிருஷ்ணன் சுடப்பட்ட விஷயத்தில் ஒரு நெருடல் இருக்கு ஸார். அந்த நெருடல் உண்மையாய் இருந்தால் எல்லா உண்மைகளும் வெளியே வந்துடும்."

"என்ன நெருடல்...?"

ஜெயச்சந்திரன் குரலைத் தாழ்த்தினார்.

"இன்ஸ்பெக்டர் குணசேகரன், டாக்டர் சாமுவேல் மரணங்களுக்கும் இப்போ சுடப்பட்டு இறந்து போயிருக்கிற சட்ட அமைச்சர் நவநீதகிருஷ்ணன் கொலைக்கும் ஏதோ ஒரு வகையில் தொடர்பு இருக்கும்ன்னு என்னோட மனசுக்குப் படுது ஸார்!"

மறுமுனையில் கமிஷனர் குகநேசன் திகைப்பது தெரிந்தது.

"ஜெயச்சந்திரன்...! எந்த வகையில் தொடரபு இருக்கும்ன்னு நினைக்கறீங்க...?"

"செல்போன்ல எதுவும் வேண்டாம் ஸார்! நான் நாளைக்கு சென்னைக்கு வந்து உங்களைத் தனியா மீட் பண்ணிப் பேசறேன் ஸார்."

"இட்ஸ் ஓ.கே... கோவையில் கமிஷனரையும் நம்ம டிபார்ட்மெண்ட் சம்பந்தப்பட்ட நபர்களையும் பார்த்தீங்களா...? என்கொய்ரியில் ஏதாவது தகவல்கள் கிடைச்சுதா ஸார்...?"

"தகவல்கள் கிடைச்சுது ஸார்... ஆனா எதுவுமே உபயோகப்படற மாதிரியில்லை. ஆனா... கொஞ்ச நேரத்துக்கு முந்தி டி.வி.யில் நான் சட்ட அமைச்சர் நவநீதகிருஷ்ணன் சுடப்பட்ட சம்பவம் குறித்த செய்தியைப் பார்த்துட்டு இருக்கும் போது என்னோட மூளைக்குள்ளே சின்னதாய் ஒரு ஃப்ளாஷ் அடிச்சது ஸார். அந்த ஃபிளாஷ் எந்த அளவுக்கு உண்மைன்னு மேற்கொண்டு நான் நடத்தப் போகிற விசாரணையில்தான் தெரியவரும்... நான் உடனே சென்னை புறப்பட்டு வர்றேன் ஸார்...!"

"ப்ளீஸ்... கம்... இம்மீடியட்லி...!"

**ஃபேஸ்**புக்கில் எது மாதிரியான குற்றங்கள் நடந்தாலும், அந்தக் குற்றங்களின் தன்மை எந்த ஒரு தனிநபரைப் பாதித்தாலும் சரி, அவர் உடனடியாய் ஃபேஸ் புக்கில் இருக்கும் 'ரிப்போர்ட்' என்ற ஆப்ஷனுக்குப் போய் ஒரு 'க்ளிக்' செய்தால் போதும் - உடனே ஃபேஸ்புக் நிறுவனத்தினர் அந்த ஊரின் போலீஸ் ஹெட்க்வார்ட்டர்ஸுக்கு தகவல் கொடுத்து விடுவார்கள். உடனே காவல்துறை அந்தப் புகாரைப் பதிவு செய்து கொண்டு அது நியாயமான புகாராய் இருந்தால் சட்டப்படி நடவடிக்கை எடுப்பார்கள். ஃபேஸ்புக் ரிப்போர்ட் பகுதியில் குற்றத்தைப் பதிவு செய்ய விரும்பாதவர்கள் TAMILNADU POLICE என்ற வெப்சைட்டுக்குத் தகவல் அனுப்பினால் அதைக் காவல்துறை-பரிசீலித்து சைபர் க்ரைம் செய்த நபரைக் கண்டுபிடித்து சட்டத்தின் முன்பாய் நிறுத்துவார்கள்.



**உ**யர்பதவிகளில் இருக்கும் போலீஸ் அதிகாரிகளின் கூட்டத்தில் டி.ஜி.பி. நம்பெருமாள் பெப்பர் சால்ட் கலந்த ஆங்கிலத்தில் பொரிந்து தள்ளிக் கொண்டிருந்தார்.

"தமிழ்நாட்டில் என்ன நடந்து கொண்டு இருக்கிறது என்று முதலமைச்சர் என்னைக் கூப்பிட்டு - வாணலியில் போட்டு வறுக்காத குறையாய்க் கேள்விகளைக் கேட்டுக் கொண்டு இருக்கிறார். சட்டம் ஒழுங்கு இப்போது போலீஸின் கையில் இருக்கிறதா இல்லை... சமூக விரோதிகளின் கையில் இருக்கிறதா என்று எதிர்க்கட்சிகள் கேட்ட கேள்விக்கு என்னால் பதில் சொல்ல முடியவில்லை என்று பொருமுகிறார். அவர் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லமுடியாமல் ஒரு பத்து நிமிஷநேரம் தலைகுனிந்துவிட்டு வந்து இருக்கிறேன். ஏதோ ஒரு

குடும்பத் தகராறு, கொலை நடக்கலாம். முன் கோபம், முன்பகை காரணமாகவும் தமிழ்நாட்டில் அங்கொன்றும் இங்கொன்றுமாய் கொலைகள் நடப்பதை நம்மால் தடுக்க முடியாது. ஆனால் எந்த ஒரு மோட்டிவேஷனும், சரியான காரணமும் இல்லாமல் தமிழ்நாட்டுக்குள்ளே மூன்று கொலைகள்! இன்ஸ்பெக்டர் குணசேகரன், டாக்டர் சாமுவேல். இப்போது சட்ட அமைச்சர் நவநீத கிருஷ்ணன். இந்த மூன்று கொலைகளுக்கும் காரணமான கொலையாளி, கொலைகளைத் துணிச்சலாய் செய்துவிட்டு, கொலையாளி இந்த நபர்தான் என்று சொல்கிற மாதிரி ஒரு போட்டோவை கட் செய்து காது மூக்கு என்று அனுப்பி வைத்துக் கொண்டிருக்கிறான். இன்றைக்குக் காலை எனக்கு வந்த தபாலில் ஒரு போட்டோவில் இருந்த நபரின் இரண்டு கண்களையும் மட்டும் கட் செய்து ஒரு வெள்ளை பேப்பரில் ஒட்டி அனுப்பியிருக்கிறான். இதுவரைக்கும் நான்தான் கொலையாளி என்று சொல்லிக் கொண்டு யாரோ ஒரு நபர் தன் போட்டோவின் மூக்கு, காது, கண் என்று அனுப்பி வைப்பது நம்முடைய போலீஸ் டிபார்ட்மெண்ட்டுக்கு அச்சுறுத்தலாக மட்டும் இல்லை. ஒரு சவாலாகவும் இருக்கிறது. அடுத்து ஒரு கொலை நடக்கும் பொழுது போட்டோவின் 'வாய்' பகுதி வந்தாலும் ஆச்சர்யப்படுவதற்கு இல்லை. கொலையாளி தன் 'வாய்' பகுதியை வெட்டி நம்முடைய டிபார்ட்மெண்ட்டுக்கு அனுப்பி வைப்பதற்கு முன்பாய் அந்தக் கொலையாளி யார் என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும். ஷேல்... வீ...?"

கமிஷனர் குகநேசன் எழுந்தார். தனக்கு முன்பாய் நீட்டிக் கொண்டிருந்த சிறிய மைக்கில் பேசினார்.

"ஸார்! இந்தக் கொலைகள் எல்லாமே ஒரு அதிரடியான நடவடிக்கை மூலம் நடத்தப்பட்டு இருக்கிறது. யாரோ ஒரு நபரின் மூர்க்கமான கோபம் என்பது மட்டும் தெளிவாய்ப் புரிகிறது. கொலையுண்ட இன்ஸ்பெக்டர் குணசேரனும், டாக்டர் சாமுவேலும் பதினைந்து நாட்களுக்கு முன்னால் பேசிக் கொண்ட செல்போனிக் கான்வர்சேஷனில் திரிபுரம் என்கிற வார்த்தையும்,

ஜே.பி. என்கிற ஒரு நபர் சாலைவிபத்தில் இறந்து போனது பற்றியும் இடம் பெற்று இருந்தது. இந்த இரண்டு வார்த்தை தடயங்களையும் வைத்துக் கொண்டு ஒரு இன்வெஸ்டிகேஷன் போய்க் கொண்டு இருக்கிறது ஸார். கடந்த சில வருஷங்களில் சாலை விபத்தில் இறந்து போனவர்களின் பெயர்களில் ஜே.பி. என்ற இன்ஷியல் யார்க்காவது இருக்கிறதா அல்லது ஜே.பி. என்ற இன்ஷியலுக்கு ஏற்ற மாதிரியான பெயர் யார்க்காவது இருக்கிறதா என்று ரோடு ஆக்ஸிடெண்ட் அக்கரன்ஸ் லிஸ்டில் தேடிக் கொண்டு இருக்கிறோம்."

"கிடைத்ததா?"

"இல்லை ஸார்... அந்த ஆக்ஸிடெண்ட் எப்போது, எந்த வருஷம், எந்த மாதம், எந்த நாள் நடந்தது என்பதைக் கண்டுபிடிக்க கூடுதல் நேரம் ஆகிறது."

"அது என்ன திரிபுரம்?"

"ஏதோ ஊர் பெயர் போல் தெரிகிறது. ஆனால் சிவிக் வில்லேஜ் நேம்ஸ் லிஸ்டில் தேடிப் பார்த்தபோது அந்தப் பெயரில் எந்த ஒரு கிராமும் இல்லை ஸார்...!"

"இதோ பாருங்கள் மிஸ்டர் குகநேசன்... ஐ டோண்ட் வாண்ட் திஸ் ஃபார்மல் என்கொய்ரீஸ். உப்பு சப்பில்லாத பதில்கள் எனக்குத் தேவையில்லை. நான் இன்னிக்கு சாயந்தரம் சீஃப் மினிஸ்டர் கிட்டே பேசப் போகும்போது என் கைவசம் உபயோககரமான தகவல்கள் வேணும். எந்தத் தகவலும் இல்லாமல் நான் சீஃப் மினிஸ்டர்க்கு முன்னாடி போய் சல்யூட் அடிக்க முடியாது..."

"எப்படியும் இன்னிக்கு சாயந்தரத்துக்குள்ளே வி வில் கெட் யூஸ்ஃபுல் இன்ஃபர்மேஷன்ஸ்... ஸார்...!"

"லெட் அஸ் ஸீ அகெய்ன் வித் சம் ஃப்ரூட்ஃபுல் இன்பர்மேஷன்ஸ்..."

"சர்ட்டன்லி ஸார்!"

டி.ஜி.பி. நம்பெருமாள் நாற்காலியினின்றும் எழ, எல்லோரும் எழுந்தார்கள். கமிஷனர் குகநேசன் இறுக்கமான முகத்தோடு ஹாலினின்றும் வெளிப்பட்டார். தன் செல்போன் ரிங்டோனை

வெளியிடும் வைப்ரேஷன் சத்தத்தைக் கேட்டதும் எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தார்.

அவருடைய உதவியாளர் அழைத்திருந்தார்.

"சொல்லுங்க வெங்கடேசன்!"

"ஸார்....! நான் ஏர் போர்ட்டிலிருந்து பேசறேன்."

"நானே உங்களுக்கு போன் பண்ணலாம்ன்னு இருந்தேன். கோயமுத்தூரிலிருந்து ஜெயச்சந்திரன் வந்துட்டாரா?"

"ஸார்! அவர் வரலையே!"

"என்னது... வரலையா...?"

"ஆமா ஸார்..."

"இந்த ஃப்ளைட்லதானே புறப்பட்டு வர்றதாய் சொன்னார்...?"

"சொன்னார் ஸார்! பட் வரலையே!"

"ஏர்போர்ட் லௌஞ்ச்ல பார்த்தீங்களா?"

"ஏர்போர்ட் பூராவும் சுற்றிப் பார்த்துட்டேன் ஸார். அவர் வரலை...!"

"போன் பண்ணீங்களா?"

"பண்ணினேன் ஸார்.... போன் 'ஸ்விட்ச்ட் ஆஃப்' ன்னு வருது...!"

"ஏதோ விபரீதம்?"

"நானும் அப்படித்தான் ஸார் நினைக்கிறேன்."

"சரி... நீங்க ஒரு காரியம் பண்ணுங்க."

"சொல்லுங்க ஸார்!"

"சைபர் க்ரைம் டெலிகம்யூனிகேஷன் டிபார்ட்மெண்ட்டுக்கு போன் பண்ணி ஜெயச்சந்திரனோட நம்பரை ஜி.பி.ஆர்.எஸ். மூலம் ட்ரேஸ் அவுட் பண்ணச் சொல்லுங்க..."

"எஸ்... ஸார்!"

"அரைமணி நேரம் கழிச்சு மறுபடியும் என்னை காண்டாக்ட் பண்ணுங்க."

"ஸார்! இப்போதைக்கு இந்த விஷயத்தை ஆஃப் த ரிக்கார்டா வெச்சுக்கலாமா?"

"கண்டிப்பா...! இந்த விஷயத்தை இப்போதைக்கு யார் கிட்டேயும் ஷேர் பண்ணிக்க வேண்டாம்."

"எஸ்.. ஸார்."

செல்போனை வியர்வை மினுமினுக்கும் முகத்தோடு அணைத்த கமிஷனர் குகநேசன் சிந்தனை வயப்பட்டவராய் மெள்ள நடந்தார்.

'ஜெயச்சந்திரன் கோயமுத்தூரிலிருந்து ஏன் புறப்பட்டு வரலை...? அங்கே அவர்க்கு ஏதாவது பிரச்னை என்றால் எனக்கு போன் பண்ணி சொல்லியிருப்பாரே? அவர்க்கு போன் பண்ணிப் பார்க்கலாமா?'

யோசிப்பை செயலாக்க தன்னுடைய செல்போனில் ஜெயச்சந்திரனின் எண்ணைத் தொடர்பு கொண்டார்.

உடனே மறுமுனையில் ரிங் போயிற்று.

சில விநாடிகளுக்குப் பின் ஒரு குரல் கேட்டது.

"வணக்கம் கமிஷனர் ஸார்... ஜெயச்சந்திரனோட செல்போன் இப்போ என்கிட்டேதான் இருக்கு... அவரும் என்கிட்டதான் இருக்கார். இனிமே நீங்க இந்த செல்போன் எண்ணைத் தொடர்பு கொள்ளமுடியாது. அஸிஸ்டண்ட் போலீஸ் கமிஷனர் ஜெயச்சந்திரனையும் இனிமே நீங்க பார்க்க முடியாது. காரணம் ஜெயச்சந்திரன் உங்களை விட புத்திசாலி. எப்பவுமே எனக்கு புத்திசாலிகளைப் பிடிக்காது. அவங்க மாதிரியான ஆட்கள் இருக்கும்போது எங்களை மாதிரியான ஆட்கள் நிம்மதியாக இருக்க முடியாது!"

"ஏ...ஏ... ஏய்... நீ யாரு...?"

"போலீஸ் டிபார்ட்மெண்ட்டுக்கு பிடிக்காதவன்."

இந்த இண்ட்டர்நெட் விபரீதத்தில் குழந்தைகளும் பாதிக்கப்படத்தான் செய்கிறார்கள். இன்றைய குழந்தைகளின் கையில் ஐ போன், லாப்டாப் போன்றவை சர்வசாதாரணமாய் புழக்கத்தில் இருக்கின்றன. குழந்தைகள் பொது அறிவு சம்பந்தமாய் இணைய தளத்துக்குள் சென்று தகவல்களைத் தேடும் போது தேவையில்லாத இணைய பக்கங்களும், ஆபாசப் புகைப்படங்களும் அவர்களை மிரள வைக்கின்றன. சில குழந்தைகள் அந்தப் பக்கங்களை ஆர்வமாய் பார்க்க ஆரம்பிக்கும் போது தேவையில்லாத பிரச்னைகளில் மாட்டிக்

கொள்கிறார்கள். எனவே குழந்தைகள் இணைய தளங்களைக் கையாளும் போது பெற்றோர்களின் கண்காணிப்பு இருப்பது அவசியம்.



கண்டக்டர் குரல் கொடுத்தார்.

"பூவாணி கிராமம் யார் ஸார் கேட்டது? இங்கே இறங்கிக்க...!"

பஸ்ஸின் கடைசி சீட்டில் உட்கார்ந்திருந்த - மஃப்டி ட்ரஸ் அணிந்து இருந்த - இன்ஸ்பெக்டர் கதிர் ஒரு தோள் பையோடு இறங்கினார். நல்ல வெய்யில் நேரம். ஆனாலும் அந்த பூவாணி கிராமம் அடர்த்தியான தென்னந் தோப்புகளோடும், கண்ணுக்கெட்டிய தூரம் வரைக்குமான வயல்வெளிகளோடும் தெரிந்து கண்களுக்குக் குளிர்ச்சியைக் கொடுத்தது.

பஸ் நின்றுவிட்டு புறப்பட்ட இடத்திலேயே ஒரு டீக்கடை ஒரு சின்ன கும்பலோடு தெரிந்தது. பாதி பேர் கையில் வடையும் டீயும் இருக்க, மீதி பேர் நீளமாய் போடப்பட்டு இருந்த பெஞ்சில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். கைகளில் நாளிதழ்கள்.

கதிர் நெருங்கினார். கொஞ்சம் பளிச் சென்று சட்டை வேஷ்டி அணிந்து இருந்த நபரிடம் கேட்டார்.

"இந்த கிராமத்துல ஜம்புநாதன்னு ஒருத்தர்..." கேட்க கேட்கவே அந்த நபர் குறுக்கிட்டார்.

"உர வியாபாரம் பண்ணிட்டு இருந்தாரே... அவரா?"

"அவரேதான்...! அவரோட வீடு எங்கேன்னு சொல்ல முடியுமா?"

"நீங்க...?"

"அவர்க்கு தூரத்து சொந்தம். முதல் தடவையாய் இந்த கிராமத்துக்கு வர்றேன்."

"அவர் இப்போ உடம்புக்கு முடியாமே இருக்காரே?"

"அது தெரிஞ்சுதான் வந்தேன்."

"அவரோட வீட்டைக் கண்டு பிடிக்கிறது ஒண்ணும் பெரிய கஷ்டம் இல்லை. நீங்க இதே வழியில் நேராய் போனீங்கன்னா ஒரு சின்ன பாலம் வரும். அந்த பாலத்தையொட்டி வலது கைப்பக்கம் பிரியற ரோட்ல நடந்தா கடைவீதியும், கொஞ்சம் தள்ளி ஆஞ்சநேயர் கோயிலும் வரும். அந்தக் கோயிலுக்குப் பின்னாடி இருக்கிற மேட்டுத் தெருவில் ரெண்டு மாடிக் கட்டிடம் ஒண்ணு இருக்கும். அதுதான் அவரோட வீடு."

கதிர் ஒரு நன்றியை அந்த நபர்க்குத் தெரிவித்துவிட்டு குற்றுச் செடிகள் மண்டிய அந்த ஒற்றையடிப் பாதையில் பத்து நிமிட நேரம் நடந்து அவர் சொன்ன இரண்டு மாடிக் கட்டிடத்துக்கு முன்பாய் வந்து நின்றார். கட்டிடத்தின் முகப்பிலேயே ஜம்புநாதன் என்கிற பெயர்ப் பலகையும் திறந்திருந்த வாசல் கதவும் பார்வைக்குக் கிடைத்தது.

வாசல் பார்த்து நாற்காலியில் உட்கார்ந்திருந்த அந்த அறுபது வயது மதிக்கத் தகுந்த நபர் கதிரைப் பார்த்துவிட்டு நெற்றியைச் சுருக்கினார்.

"யா... யாரு?"

கதிர் மெள்ள படியறினார்

"இங்கே... ஜம்புநாதன்னு..."

"நான்தான்...!"

"என் பேர் கதிர்...! சென்னையிலிருந்து வர்றேன். உங்ககிட்டே கொஞ்சம் பேசணும்!"

"உள்ளே வாங்க..!"

கதிர் உள்ளே போய் அவர் காட்டிய நாற்காலியில் உட்கார்ந்தார்.

ஜம்புநாதன் தான் அணிந்து இருந்த ஸ்பெக்ஸைக் கழற்றி தன் வேஷ்டியின் நுனியால் துடைத்துக் கொண்டே கதிரை ஏறிட்டார்.

"சொல்லுங்க... என்ன விஷயம்?"

கதிர் அந்த அறையைச் சுற்றும் முற்றும் பார்த்து விட்டுக் கேட்டார்.

"இந்த வீட்ல நீங்க மட்டும்தான் தனியாய்

இருக்கீங்களா?"

ஜம்புநாதனின் முகத்தில் லேசாய் கோபம் பரவியது.

"இந்த வீட்ல நான் மட்டும் தனியாய் இருந்தா என்ன... இல்லாட்டி போனா என்ன.... இதனால உங்களுக்கு என்ன லாபம்?"

"ஒரு போலீஸ் ஆபீஸரோட கேள்விகள் இப்படித்தான் இருக்கும்."

ஜம்புநாதனின் முகத்தில் இப்போது திகைப்பு.

"நீங்க போலீஸா...?"

அடையாள அட்டையை எடுத்துக் காட்டினார் கதிர். ஜம்புநாதன் வாங்கிப் பார்த்துவிட்டு மெள்ள முனகினார்.

"ஸாரி... ஸார்...! நீங்க யார்ன்னு தெரியாமே கொஞ்சம் கடுமையாய் பேசிட்டேன். இந்த வீட்ல இப்போதைக்கு நான் மட்டும்தான் தனியாய் இருக்கேன்."

"உங்க மனைவி?"

"ஷி... ஈஸ்... நோ மோர்."

"உங்களுக்கு சன்ஸ் அண்ட் டாட்டர்ஸ்?"

"ஒரு பொண்ணு, ஒரு பையன்... ரெண்டு பேருமே மேரீட். இப்போ அவங்க யு.எஸ்.ஸில் க்ரீன் கார்டு வாங்கிட்டு செட்டிலாயிட்டாங்க..."

"உங்க மனைவி எப்ப இறந்தாங்க?"

"அஞ்சு வருஷத்துக்கு முன்னாடி"

"எப்படி மரணம்?"

"ரோடு ஆக்ஸிடெண்ட்."

"உங்க மனைவி பேரு பாரிஜாதம்தானே?"

"ஆமா... ஸார்."

"காஞ்சிபுரத்துக்குப் பக்கத்தில் இருக்கிற ஒரு தனியார் பள்ளியில் அவங்க ஹெட் மிஸ்ட்ரஸ்ட்டா வேலை பார்த்தாங்க இல்லையா?"

"ஆமா... ஸார்..."

"அது விபத்துதானா?"

"நீங்க கேக்கிறது எனக்குப் புரியலை ஸார்."

"இல்லை... அது விபத்துதானா... அல்லது விபத்து என்கிற பெயரில் நடந்த கொலையா?"

ஜம்புநாதனின் முகம் இப்போது ஒரு மினுமினுப்பான வியர்வைக்கு உட்பட்டது.

"இத்தனை வருஷம் கழிச்சு இப்ப எதுக்காக ஸார் இந்தக் கேள்வி..."

"அப்படி ஒரு அவசியம் ஏற்படப் போய்த்தானே நான் உங்களைப் பார்க்க வந்தேன்."

"ஸார்...! நீங்கள் பேசறது எதுவுமே எனக்குப் புரியலை."

கதிர் புன்னகைத்தார்.

"இப்ப புரியற மாதிரி சொல்றேன்.... அதுக்கு முன்னாடி நான் கேட்கிற கேள்விகளுக்கு உங்களோட உண்மையான பதிலை எதிர்பார்க்கிறேன். டாக்டர் சாமுவேலை உங்களுக்குத் தெரியுமா...?"

"டாக்டர் சாமுவேல்...?"

"ஆமா...!"

"பேரு... கேள்விப்பட்ட மாதிரி இல்லையே?"

"சரி... குணசேகரன்..? அவர் ஒரு இன்ஸ்பெக்டர்."

"இன்ஸ்பெக்டர் குணசேகரன்...?" என்று லேசாய் கண்களை மூடி சில விநாடிகள் யோசித்தவர் 'தெரியும்' என்பது போல் தலையை ஆட்டினார்.

"எப்படி தெரியும்?"

"என்னோட மனைவி பாரிஜாதம் சாலை விபத்தில் இறந்த போது அந்தக் கேஸை விசாரணை பண்ணியவரே அந்த இன்ஸ்பெக்டர்தான்."

"இவ்வளவு வருஷத்துக்கு அப்புறமும் எப்படி ஒரு இன்ஸ்பெக்டரோட பேரை ஞாபகம் வெச்சிருக்கீங்க...?"

ஜம்புநாதனின் உதடுகளில் ஒரு புன்னகை அரும்பியது.

"காரணம்.... அவர் நடந்துகிட்ட முறைதான்."

"எப்படி நடந்துகிட்டார்...?"

"என்னை மிரட்டற மாதிரி விசாரணை பண்ணினார்."

"மிரட்டற மாதிரின்னா... எப்படி?"

உங்க மனைவிக்கும் உங்களுக்கும் என்ன பிரச்னை, 'உங்க மனைவி மேல் மோதின லாரியை ஓட்டி வந்த டிரைவர் கொடுத்த ஸ்டேட்மெண்ட்டைப் பார்த்தா உங்க மனைவி பாரிஜாதம்தான் லாரிக்கு முன்னாடி போய் தானாய் விழுந்த மாதிரி தெரியுது'ன்னு சொன்னார். எனக்கும் என்னோட மனைவிக்கும் எந்த ஒரு பிரச்னையும் இல்லைன்னு பக்கத்து வீட்டுக்காரங்களும், என்னோட ரிலேட்டீவ்ஸும் சொன்ன பின்னாடிதான் அந்த இன்ஸ்பெக்டர் குணசேகரன் அதை நம்பி, என்னோட மனைவி இறந்தது ஒரு விபத்தில்தான் என்று கேஸை க்ளோஸ் பண்ணினார். அந்த துக்கமான சூழ்நிலையிலேயும் அவர் எனக்கு ஒரு வாரம் டார்ச்சர் கொடுத்தார். அதனாலதான் அவரோட பேரை என்னால மறக்க முடியலை...!" - சொன்ன ஜம்புநாதன் கதிரை குழப்ப முகத்தோடு பார்த்தார்.

"ஸார்! சம்பவம் நடந்து வருஷம் அஞ்சு ஓடிப் போச்சு... இப்ப திடீர்ன்னு எதுக்காக ஸார் இந்த விசாரணை? அந்த இன்ஸ்பெக்டர் குணசேகரன் மறுபடியும் என்மேல சந்தேகப்பட்டு ஏதாவது புகார் கொடுத்து இருக்காரா?"

"புகார் குடுக்க அவர் உயிரோடு இருந்தாத்தானே?"

ஜம்புநாதன் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

"என்ன ஸார் சொல்றீங்க...?"

"அவரைப் போன வாரம் கோவை காந்திபுரம் பகுதியில் இருக்கிற 'ரமணாநகர்' என்கிற ஒரு ஒதுக்குப்புறமான ஏரியாவில் வெச்சு யாரோ கொலை பண்ணிட்டாங்க...!"

"கொலை பண்ணினது யார் ஸார்...?"

"தெரியலை...! கோவையில் குணசேகரன் கொலை செய்யப்பட்டது போல் டாக்டர் சாமுவேலையும் சென்னை திருவான்மியூரில் அவர் காலை நேரத்தில் வாக்கிங் போனபோது அவர் வழக்கமாய் சாப்பிடற அருகம்புல் ஜூஸில் விஷம் கொடுத்து கொலை பண்ணியிருக்காங்க. இந்த ரெண்டு பேரும் கொலை செய்யப்படறதுக்கு முந்தி நிறைய தடவை நிறைய

நேரம் செல்போன்ல பேசியிருக்காங்க. அப்படி பேசப்பட்ட ஒரு உரையாடலில் ஜே.பி. என்கிற ஒரு நபர் விபத்துக்குள்ளான விஷயத்தைப் பத்தின விபரமும் இருந்தது. யார் அந்த ஜே.பி.ன்னு கண்டு பிடிக்கிறதுக்காக பத்து வருஷங்களுக்கு முன்னாடி யிருந்து நடந்த விபத்துக்களை 'ஆக்ஸிடென்ட்ஸ் அக்கரன்ஸ்' என்கிற தலைப்பின் கீழே கம்ப்யூட்டர்க்கு குடுத்துப் பார்த்தோம். ஜே.பி. என்கிற இந்த இரண்டு இன்ஷியலுக்கும் எதுவும் பொருந்தி வரலை. அதுக்கப்புறம் விபத்தில் இறந்தவங்களோட கணவன் மனைவிகளோட பெயர்களின் முதல் இரண்டு எழுத்துக்களைப் பொருத்திப் பார்த்தோம். உங்க பேர் ஜம்புநாதன். உங்க மனைவி பேர் பாரிஜாதம். ஜே.பி. என்கிற எழுத்துக்கள் பொருந்தி வந்தது. உடனடியாய் ஒரு 'ஷேடோ என்கொய்ரி'யெ நடத்திப் பார்த்தோம். உங்க மனைவி பாரிஜாதம் காஞ்சிபுரத்தில் இருந்த ஒரு தனியார் பள்ளிக் கூடத்தில் ஹெட்மிஸ்ட்ரஸ்ஸாய் வேலை பார்த்த அதே காலகட்டத்தில்தான் இன்ஸ்பெக்டர் குணசேகரனும் அந்த ஏரியா பீட் இன்ஸ்பெக்டராய் வேலை பார்த்து இருக்கார். அது மட்டும் இல்லை, டாக்டர் சாமுவேலும் காஞ்சிபுரம் அரசு மருத்துவமனையில் ட்யூட்டி டாக்டராய் ஜாய்ன் பண்ணி வேலையில் இருந்திருக்கார்."

ஜம்புநாதன் பதட்டமானார்.

"ஸார்! இப்ப நீங்க என்ன சொல்ல வர்றீங்கன்னு எனக்குப் புரியலை...!"

"உங்க மனைவி பாரிஜாதம் விபத்தில்இறந்துபோன சம்பவம் ஐந்து வருஷத்துக்கு முன்னால் நடந்தது. அந்த சம்பவத்தில் ஏதோ ஒரு அவிழாத முடிச்சு இருக்கப் போய்த்தான் இப்போ இந்த இரண்டு கொலைகளும் நடந்து இருக்கலாம்ன்னு போலீஸ் சந்தேகப்படுது..."

"நீங்க இப்படி சந்தேகப்படறதுக்கு என்ன காரணம் ஸார்?"

"அது என்ன காரணம்ன்னு பிடிபடலை... ஆனா டாக்டர் சாமுவேலும் இன்ஸ்பெக்டர் குணசேகரனும் செல்போனில் பேசிகிட்டு இருந்த போது 'திரிபுரம்'

என்கிற ஒரு வார்த்தையை யூஸ் பண்ணியிருக்காங்க...! அந்த வார்த்தைக்கு என்ன அர்த்தம்ன்னு உங்களுக்குத் தெரியுமா?"

ஜம்புநாதன் யோசனையோடு நெற்றியைத் தேய்த்துவிட்டு ஒரு பெருமூச்சோடு நிமிர்ந்தார்.

"தெரியலையே ஸார்!"

"இட்ஸ் ஓ.கே...! உங்க மனைவி காஞ்சிபுரத்தில் எந்தத் தனியார் பள்ளியில் ஹெட்மிஸ்ட்ரஸ்ஸாய் வேலை பார்த்தாங்க?"

"ராஜாம்பாள் மெட்குரிலேஷன் ஸ்கூல்."

"காஞ்சிபுரத்துல எந்த ஏரியா?"

"பிள்ளையார் பாளையம்..."

"மிஸ்டர் ஜம்புநாதன்!" இந்த கார்டுல என்னோட செல்போன் நம்பர், அட்ரஸ் இருக்கு..! நான் இங்கிருந்து போன பிறகும் நல்லா யோசனை பண்ணுங்க... அந்த 'திரிபுரம்' என்கிற வார்த்தை எதைக் குறிக்கிறதுன்னு திடீர்ன்னு உங்களுக்குப் பொறி தட்டலாம். உடனே எனக்கு போன் பண்ணுங்க. நேர்ல என்னைப் பார்த்து பேசணும்ன்னா இந்த கார்டுல இருக்கிற அட்ரஸுக்கு வாங்க."

ஜம்புநாதன், கதிர் நீட்டிய அந்த விசிட்டிங் கார்டை வாங்கிக் கொண்டார்.

"ஸார்! என்னோட மனைவி இறந்து போய் அஞ்சு வருஷமாச்சு. அவளோட இறப்பைத் தாங்கிக்க முடியாமே இவ்வளவு நாளாய் ஒரு ஜடம் மாதிரி வாழ்ந்துட்டு இருந்தேன். கொஞ்ச நாளாய்த்தான் அவளோட நினைவுகளிலிருந்து விடுபட்டு பழைய வாழ்க்கைக்குத் திரும்பிட்டு இருந்தேன்... இந்த நேரத்துல நீங்க வந்து நீறு பூத்த நெருப்பாய் இருந்த என்னோட துக்கத்தைக் கிளறி விட்டுட்டீங்க!"

"ஸாரி மிஸ்டர் ஜம்புநாதன்...! போலீஸ் டிபார்ட்மெண்ட்ங்கிறது ஒரு கடல் மாதிரி. ஒரு கடல்ல எப்படி அலைகள் வந்துட்டும் போயிட்டும் இருக்குமோ அதைப் போலத்தான் புதிது புதிதாய் கேஸ்கள் வரும். போகும். அதில சில பழைய கேஸ்கள் புது அவதாரம் எடுக்கும் போதுதான் இது மாதிரியான பிரச்னைகள் வரும். சில உண்மைகள் காலத்தின்

கட்டாயம் காரணமாய் ஊமையாய் இருக்கும். ஆனால் சமயம் கிடைக்கும் போது அந்த உண்மைகள் வாயைத் திறந்து பேசிடும். இந்த கேஸ்ல உங்க ஒத்துழைப்பும் எனக்கு வேணும்!

"ஷ்யூர் ஸார்!" ஜம்புநாதன் சொல்ல கதிர் விடைபெற்றுக் கொண்டு வாசற்படி இறங்கி தெருவில் நடந்தார். அவர் போவதையே பார்த்துக் கொண்டிருந்த ஜம்புநாதன், தன் சர்ட் பாக்கெட்டில் இடம் பிடித்து இருந்த செல்போனை எடுத்தார்.

காண்டாக்ட் லிஸ்டில் ஒரு எண்ணைத் தேடிக் கண்டுபிடித்து பட்டனைத் தட்டினார். மறுமுனையில் ரிங் போய் பெண்ணின் குரல் கேட்டது.

"எப்படியிருக்கீங்க ஜம்புநாதன்?"

"நாட்கள் ஏதோ போயிட்டிருக்கு!"

"என்ன குரல் டல்லாயிருக்கு?"

"மறுபடியும் பிரச்னை எட்டிப் பார்க்குது!"

"என்ன பிரச்னை?"

"திரிபுரம்"

"எப்படி?"

"இப்பத்தான் சென்னையிலிருந்து 'கதிர்'ன்னு ஒரு இன்ஸ்பெக்டர் என்னை வந்து பார்த்து பேசிட்டு போறார்..."

"திரிபுரத்தைப் பத்தி சொல்லிட்டீங்களா?"

"சொல்லலை!"

"இனிமேலும் சொல்லாதீங்க!"

"வந்துட்டுப் போன இன்ஸ்பெக்டர் கண்டு பிடிச்சுடுவார் போலிருக்கே?"

"தைரியமாய் இருங்க. அவராலே கண்டுபிடிக்க முடியாது!"

---

இண்டர்நெட்டில் குற்றச் செயல் புரிபவர்கள், இண்டர்நெட் தொழில் நுட்ப பொறியாளர்களைக் காட்டிலும் புத்திசாலித்தனமாய் செயல் படுவதாக ஒரு சர்வே கவலைப்படுகிறது. வங்கிகள் எவ்வளவு பாதுகாப்பான சங்கேத வார்த்தைகளை உருவாக்கினாலும் அதையும் ஏமாற்றுகிற மாதிரி

குற்றவாளிகள் செயல்பட்டு பண மோசடி செய்து விடுகிறார்கள். பொதுவாக 'ஆன் லைன் பேங்கிங்'கைக் கையாள்பவர்கள் யூஸர் ஐ.டி., பாஸ்வேர்ட் போன்ற விஷயங்களில் ரகசியம் காக்க வேண்டும். PASSWORD களை செல்போன்களில் பதிய வைக்கக்கூடாது. அதே போல் டயரிகளிலும் குறித்து வைக்கக் கூடாது. சுலபமான பாஸ்வேர்ட்ஸ்களை உருவாக்கினால் அதை நன்றாக நினைவு வைத்துக் கொள்ள முடியும்.



# 13

"என்ன சொல்றீங்க மிஸ்டர் குகநேசன்...? அஸிஸ்டண்ட் கமிஷனர் ஜெயச்சந்திரன் கோயம்புத்தூரிலிருந்து சென்னை திரும்பலையா...?"

டி.ஜி.பி. நம்பெருமாள் குரலில் அதிர்ச்சியையும் கண்களில் கவலையையும் காட்டியபடி கேட்டார்.

"எஸ்... ஸார்...! அவரை யாரோ ஒருத்தன் கடத்திட்டுப் போய் தன்னோட கஸ்டடியில் வெச்சிருக்கான்."

"ஜெயச்சந்திரனோட செல்போனை ஜி.பி.ஆர்.எஸ். பண்ண முடியலையா?"

"முடியலை ஸார்...! பட் சைபர் க்ரைம் டிபார்ட்மெண்ட் தொடர்ச்சியாய் முயற்சி பண்ணிட்டு இருக்காங்க."

டி.ஜி.பி. எரிச்சலானார்.

"மொதலில் இன்ஸ்பெக்டர் குணசேகரன், அப்புறம் டாக்டர் சாமுவேல், இப்போ அஸிஸ்டண்ட் கமிஷனர் ஜெயச்சந்திரன். கொலையாளியோட நோக்கம் என்னான்னு தெரியலையே...!"

"ஸார்! கொலையாளி ஒரு பெண்ணாய் இருக்கலாம்ன்னு ஃபாரன்ஸிக் போட்டோ க்ராஃபிக் செக்ஷன் கெஸ் ஒர்க் பண்ணி ஒரு ரிப்போர்ட் கொடுத்து இருக்காங்க..."

"எதை பேஸ் பண்ணி அந்த முடிவுக்கு வந்து இருக்காங்க?"

"கொலையாளி அனுப்பி வெச்ச கண், காது, மூக்கு போன்ற போட்டோ பாகங்களை ஒண்ணா இணைச்சு பார்த்தப்போ அந்த கெஸ் ஒர்க் வெளிப்பட்டு இருக்கு. அதுவும் கொலையாளி ஒரு பதினஞ்சு வயசுப் பெண்ணாய் இருக்க வாய்ப்பு அதிகம்ன்னு அந்த ரிப்போர்ட் ஒரு சின்ன சந்தேகத்தையும் க்ரியேட் பண்ணியிருக்கு."

"வாட் நான்சென்ஸ் யூ ஆர் டாக்கிங் மிஸ்டர் குகநேசன்? ஒரு பதினைஞ்சு வயசுப் பொண்ணு எப்படி ரெண்டு கொலைகளையும் பண்ணி ஒரு அஸிஸ்டண்ட் போலீஸ் கமிஷனரையும் கடத்தியிருக்க முடியும்?"

"ஸார்! திஸ் ஈஸ் அஸ்யூம்ட் ஒன். நாட் க்ளீயர் ஸ்டேட்மெண்ட்" குகநேசன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அவருடைய செல்போன் டயல்டோனை வெளியிட்டது. எடுத்து அழைப்பது யார் என்று பார்த்தார்.

மறுமுனையில் டெப்டி - கமிஷனர். குரல் கொடுத்தார்.

"ஸார்! நான் சிங்காரவேலு!"

"சொல்லுங்க!"

"கண்ட்ரோல் ரூமிலிருந்து இப்பத்தான் ஒரு இன்ஃபர்மேஷன் வந்தது ஸார்."

"என்ன?"

"அஸிஸ்டண்ட் கமிஷனர் ஜெயச்சந்திரன் கடுமையாய் தாக்கப்பட்ட நிலைமையில் வானகரம் சிறுவர் பூங்காவுக்குப் பக்கத்தில் மயக்கமாய் கிடந்து இருக்கார் ஸார்."

"மை குட்னஸ்! எப்போ...?"

"இப்பத்தான் பத்து நிமிஷத்துக்கு முன்னாடி எனக்கு சீஃப் கண்ட்ரோல் ஆபீஸர் ஜோசப் போன் பண்ணினார் ஸார்."

"மிஸ்டர் ஜெயச்சந்திரனின் உயிர்க்கு எந்த ஒரு ஆபத்தும் இல்லையே?"

"உயிர்க்கு எந்த ஆபத்தும் இல்லை ஸார். நவ் ஹி ஈஸ் ஹாஸ்பிடலைஸ்ட்."

"எந்த ஹாஸ்பிடல்?"

"ஜோதி ஹாஸ்பிடல் ஸார்... மதுர வாயிலுக்குப் பக்கத்தில் ஹோட்டல் 'ரிட்ஜ்' க்கு அடுத்தபடியாய் வர்ற முதல் வலது பக்கத் தெருவில் அந்த ஹாஸ்பிடல் இருக்கு ஸார்!"

"இன்னும் ஒரு மணிநேரத்துக்குள்ளே நான் அங்கே வர்றேன். நீங்களும் வந்துடுங்க...!"

"இப்ப நான் அந்த ஹாஸ்பிடலுக்குத்தான் போயிட்டிருக்கேன் ஸார்."

"தென்... நோ... ப்ராப்ளம்...! நான் வந்துடறேன்"

.......

**இ**ப்போது இந்த 2015-ம் ஆண்டில் எப்படி எல்லோருடைய கைகளிலும் செல்போன் இருக்கிறதோ அதே போல் 2025-ம் ஆண்டுக்குள் எல்லோரும் இண்டர்நெட்டைப் பயன்படுத்த ஆரம்பித்து விடுவார்கள் என்று ஒரு புள்ளி விபரம் சொல்கிறது. அந்தக் கால கட்டத்தில் சைபர் க்ரைம் குற்றங்கள் கட்டுப்படுத்த முடியாத அளவுக்கு வளர்ந்து இருக்குமென்றும் அதன் காரணமாக பொருளாதார ரீதியாகவும், மனரீதியாகவும் 75 சதவீத மனிதர்கள் பாதிக்கப்படுவார்கள் என்றும் 'WHO' எனப்படும் உலக சுகாதார அமைப்பு எச்சரிக்கை விடுத்துள்ளது.



**கா**ஞ்சிபுரம்.

பிள்ளையார் பாளையம்.

ராஜாம்பாள் மெட்ரிகுலேஷசன் ஸ்கூல் குறைந்த பட்சம் ஐந்து ஏக்கர் பரப்பளவில் கட்டிடங்களாய் பரவியிருக்க, பள்ளியின்

கரஸ்பாண்டெண்ட் குமுதாவின் அறையில் அவர்க்கு எதிரில் இன்ஸ்பெக்டர் கதிர் உட்கார்ந்து இருந்தார். குமுதாவுக்கு அறுபது வயது இருக்கலாம். சிறிது கனமான மேக்கப்பின் காரணமாய் பத்து வயது குறைவாய் தோற்றம் காட்டினாள். கதிர் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் பட்டும் படாத மாதிரி அலட்சியமாய் பதில் சொன்னாள்.

"இதோ பாருங்க இன்ஸ்பெக்டர்...! நீங்க எது எதுக்கோ முடிச்சு போட்டுகிட்டு வந்து ஒரு என்கொயரி என்கிற பேரால டார்ச்சர் குடுத்துட்டு இருக்கீங்க. நீங்க சொல்ற பாரிஜாதம் இந்த ஸ்கூல்லதான் ஹெட்மிஸ்ட்ரஸ்ஸாய் ஒர்க் பண்ணினாங்க... துரதிர்ஷ்டவசமாய் ஒரு சாலை விபத்துல இறந்தும் போயிட்டாங்க. யாரோ ஒரு இன்ஸ்பெக்டரும் டாக்டரும் செல்போன்ல பேசும் போது ஜே.பி. ன்னு பேசுனதை வெச்சுகிட்டு பழசையெல்லாம் கிளறிப் பார்க்கிறது நாட் அட்வைஸபிள்!"

கதிர் புன்னகைத்தார். "ஸாரி மேடம்! அஞ்சு வருஷத்துக்கு முன்னாடி இது சின்ன விஷயம். ஆனா இன்னிக்கு விஸ்வரூபம்."

குமுதா திகைத்தாள்.

"என்னது... விஸ்வரூபமா?"

"பின்னே...! சட்ட அமைச்சர் நவநீதகிருஷ்ணன் சுட்டுக் கொல்லப்பட்டது சாதாரண விஷயம் இல்லையே?"

"அதுக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்?"

"சம்பந்தம் நிறையவே இருக்கு.. மேடம்!"

"என்ன சம்பந்தம்?"

"சட்ட அமைச்சர் நவநிதகிருஷ்ணனை உங்களுக்குப் பழக்கம் இருக்கா?"

"இல்லை...!"

கதிர் மெள்ள சிரிக்க குமுதா அவரை ஒரு

கோபப்பார்வை பார்த்தாள்.

"இந்த சிரிப்புக்கு என்ன அர்த்தம்?"

"நீங்க பொய் சொல்றீங்கன்னு அர்த்தம்."

"நான் பொய் சொல்றேனா?"

"நிச்சயமாய் பொய்தான்! இந்தப் போட்டோவைப் பாருங்க." சொன்ன கதிர் தன் கையில் வைத்து இருந்த ஒரு ப்ரவுன் கவரிலிருந்து போஸ்ட் கார்ட் சைஸ் போட்டோ ஒன்றை எடுத்து குமுதாவிடம் நீட்ட, அவள் வாங்கிப் பார்த்தாள். பார்த்ததுமே அவளுடைய முகத்தில் இருந்த ரத்தம் காணாமல் போயிற்று.

போட்டோவில் ஒரு வீட்டின் போர்டிகோ தெரிய, காரினின்றும் இறங்கும் சட்ட அமைச்சர் நவநீதகிருஷ்ணனைக் கை கூப்பி குமுதா வரவேற்கிறாள்.

"என்ன மேடம்! போட்டோவில் இருக்கிறது நீங்கதானே...?"

"அ...அ... அது வந்து...!"

"அது நானில்லை... என்னை மாதிரியே இருக்கிற வேற யாரோன்னு சொல்லிடாதீங்க. ஏன்னா இது 'மாகறல்' எங்கிற கிராமத்தில் இருக்கிற உங்க பண்ணை வீடு. வாரத்தில் ரெண்டுநாள் சனி ஞாயிறு அங்கே போய் ஸ்டே பண்றது இன்னிக்கு வரைக்கும் உங்க நடைமுறையில் இருக்கிற ஒரு பழக்கம். என்ன மேடம்... நான் சொல்றது சரியா தப்பா...?"

குமுதா ஒன்றும் பேசாமல் தலை குனிந்து நகம் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"என்ன மேடம்! திடீர்ன்னு ஊமையாயிட்டீங்க?"

குமுதா ஒரு பெருமூச்சோடு நிமிர்ந்தாள்.

"இப்ப... உங்களுக்கு என்ன வேணும்?"

"உண்மை வேணும்."

"என்ன உண்மை?"

"சட்ட அமைச்சர் நவநீதகிருஷ்ணனை ஏன்

தெரியாதுன்னு சொன்னீங்க...?"

"அப்படி சொல்ல வேண்டிய கட்டாயம்."

"ஏன்... என்ன பிரச்னை...?"

குமுதா மறுபடியும் மௌனம் சாதிக்க, கதிர் தொடர்ந்தார்: "இதோ பாருங்க மேடம்...! நவநீதகிருஷ்ணன் ஒரு அமைச்சர். அவர் மர்மமான முறையில் சுட்டுக் கொல்லப்பட்டு இருக்கிறார். அமைச்சர் யார் யாரோடு தொடர்பு வெச்சிருந்தாரோ அவங்களையெல்லாம் போலீஸ் என்கொய்ரி பண்ணிட்டிருக்கு. நீங்களும், சட்ட அமைச்சர் நவநீதகிருஷ்ணனும் இருக்கிற இந்தப் போட்டோ அஞ்சு வருஷத்துக்கு முன்னாடி என்னோட நண்பரும் பத்திரிகை நிருபருமான ருத்ராபதி என்பவரால் எடுக்கப்பட்ட போட்டோ. ருத்ராபதி ஒரு இன்வெஸ்டிகேஷன் ஜர்னலிஸ்ட். ஊழல் பிரச்னைகளிலும் விவகாரமான வில்லங்கங்களிலும் மாட்டியிருக்கிற அமைச்சர்களை அவர்களுக்கே தெரியாமே ஃபாலோ பண்ணி போட்டோ எடுத்து அதைப் பரபரப்பான செய்தியாக்கறதுதான் ருத்ராபதியோட வேலை. அஞ்சு வருஷத்துக்கு முந்தி அது மாதிரியான ஒரு சூழலில் எடுக்கப்பட்ட போட்டோதான் இது. இந்தப் போட்டோவை ருத்ராபதி எந்த ஒரு செய்திக்கும் பயன்படுத்தாமே வெச்சிட்டிருந்தார். அமைச்சர் கொலை செய்யப்பட்ட மறுநாள் ருத்ராபதி என்னைத் தனியாய் சந்தித்துப் பேசி இந்தப் போட்டோவைக் குடுத்து 'இது உங்களுக்கு உபயோகப்படுமா'ன்னு கேட்டார். இது எங்கே எப்போ எடுத்ததுங்கற விபரத்தையும் சொன்னார். அந்த சமயத்துல அவர் குடுத்த அந்தப் போட்டோ எனக்கு ஒரு பெரிய விஷயமாய் படலை. ஆனா நேத்திக்கு பூவாணி கிராமத்தில் இருக்கிற ஜம்புநாதனைப் பார்த்துப் பேசும் போது அவர் தன்னோட மனைவி காஞ்சிபுரம் பிள்ளையார் பாளையத்தில் இருக்கிற ராஜாம்பாள்

மெட்ரிகுலேஷன் ஸ்கூல்ல ஹெட்மிஸ்ட்ரஸ்ஸாய் பணி புரிந்தவர்ன்னு சொன்னபோதுதான் இந்த போட்டோவுக்கும் ஏதோ ஒரு 'இம்பார்ட்டன்ஸ்' இருக்கிறதைப் புரிஞ்சுகிட்டேன். இன்ஸ்பெக்டர் குணசேகரனோட மரணமும், டாக்டர் சாமுவேலோட மரணமும், சட்ட அமைச்சரோட மரணமும் மூணு நேர்க்கோடுகளில் பயணம் பண்ணி ஒரே புள்ளியில் சந்திக்கிற உண்மையையும் தெரிஞ்சுகிட்டேன்."

குமுதா இப்போது முகம் வெளுத்து, வாய் உலர்ந்து போனவளாய் - கதிரை ஏறிட்டாள்.

"ஸார்! நான் உண்மையைச் சொல்றேன். ஆனா பத்திரிகைகளிலோ பிற மீடியாக்களிலோ என்னோட பேரோ, பள்ளிக்கூடத்துப் பேரோ வரக்கூடாது!"

"நீங்க மொதல்ல விஷயத்தைச் சொல்லுங்க. அதுக்குப் பின்னாடி அதைப்பத்தி யோசிச்சு ஒரு முடிவுக்கு வருவோம்!"

குமுதா மெள்ள பேச ஆரம்பித்தாள்.

"ஸார்! இந்த மெட்ரிகுலேஷன் ஸ்கூலில் ஹெட்மிஸ்ட்ரஸ்ஸாய் வேலை பார்த்த பாரிஜாதம் உண்மையிலேயே ஒரு ஜெம். நல்ல டேலண்டட் டீச்சர். 'சம்பளத்துக்காக வேலை பார்க்கக் கூடாது... கல்விப் பணி ஒருவிதமான இறைப்பணிக்கு ஒப்பானது'ன்னு சொல்லி மத்த டீச்சர்ஸை நேர்மையாகவும், உண்மையாகவும் இந்த ஸ்கூலில் உழைக்க வைத்தவர். பாரிஜாதத்தால ஸ்கூலுக்கும் வெளியில் நல்ல மதிப்பும் மரியாதையும் இருந்தது." இந்த இடத்தில் பேச்சை நிறுத்தியவள் சில விநாடிகள் மௌனமாய் இருந்துவிட்டு மறுபடியும் பேச்சைத் தொடர்ந்தாள்.

"எல்லாமே நல்லபடியாய் போயிட்டு இருந்த அந்த நேரத்துலதான் அந்த சம்பவம் நடந்தது. ப்ளஸ்-டூ- வில் படிச்சுட்டு இருந்த அபிஷேக் என்கிற ஒரு பணக்கார பையன் எய்த் ஸ்டேண்டர்ட்ல படிச்சுட்டு இருந்த 'திரிபுரசுந்தரி' என்கிற பொண்ணுகிட்ட

லைப்ரரி ரூம்ல யாரும் இல்லாத நேரமாய்ப் பார்த்து பாலியல் பலாத்காரத்தில் ஈடுபட - அந்தப் பொண்ணு இறந்துட்டா. திரிபுரசுந்தரி இறந்ததுமே அந்த அபிஷேக் பையன் பயந்து போய் ஸ்கூலை விட்டு ஓடிப்போய் அவனோட அப்பாகிட்டே சொல்லியிருக்கான். அவர் உடனே என்கிட்டே வந்துட்டார். விஷயம் வெளியே வராமே இருக்க அவர் என்கிட்டே கெஞ்சினார். லட்சக் கணக்கில் பணம் தர்றதாய் சொன்னார். நான் முதல்ல மாட்டேன்னு சொன்னேன். ஆனா அவர் அப்போ கல்வித்துறை அமைச்சராய் இருந்த நவநீதகிருஷ்ணனுக்கு போன் பண்ணி விஷயத்தை சொல்ல அவர் என்னை மிரட்ட ஆரம்பிச்சார். ஸ்கூல் நடத்தறதுக்கான அனுமதியையே ரத்து பண்ணப் போறதாய் சொல்லவும் நான் பயந்துட்டேன். இதுக்கு நடுவில் திரிபுர சுந்தரி எப்படி இறந்தா என்கிற விஷயத்தில் ஸ்கூலில் ஒரு பெரிய குழப்பம் இருந்தது. தானாய் கீழே விழுந்து தலையில் அடிபட்டு இறந்தாளா அல்லது அவளை யாராவது தள்ளிவிட்டாங்களான்னு போலீஸ் விசாரணை பண்ணிட்டு இருந்தாங்க."

கதிர் குறுக்கிட்டார்.

"அந்தப் பையன் அபிஷேக் மேல யார்க்கும் எந்த ஒரு சந்தேகமும் வரலையா?"

"வரலை...!"

"அதை நீங்க ஒரு ப்ளஸ் பாயிண்ட்டாய் எடுத்துகிட்டு உண்மையை வெளியே சொல்லாமே மௌனம் சாதிச்சுட்டீங்க.?"

"ஆமா...! அபிஷேக்கோட அப்பாவும் இதை தனக்கு சாதகமாய் எடுத்துகிட்டு இன்ஸ்பெக்டர் குணசேகரனுக்கும், டாக்டர் சாமுவேலுவுக்கும் பணம் கொடுத்து திரிபுரசுந்தரி தவறி கீழே விழுந்து தலையில் அடிபட்டு இறந்து போனதாய் போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட் வாங்கிட்டார். இருந்தாலும்

திரிபுர சுந்தரியின் மரணத்தில் மர்மம் இருப்பதாய் சொல்லி சில சமூக நல அமைப்புகள் ஸ்கூலுக்கு முன்னாடி போராட்டம் நடத்தி ஒரு கட்டத்தில் அந்த அமைப்புகளும் ஓய்ந்து போயின. சில நாட்கள் கழிச்சு ஒரு நாள் ஹெட்மிஸ்ட்ரஸ் பாரிஜாதம் என்னைப் பார்க்க வீட்டுக்கு வந்தாங்க. பொதுப்படையாய் ஸ்கூல் சம்பந்தப்பட்ட விஷயங்களைப் பேசிட்டு கடைசியாய் திரிபுர சுந்தரியின் மரணத்தைப் பத்தி பேசினாங்க."

"என்ன பேசினாங்க?"

" 'திரிபுரசுந்தரி இறந்த அன்னிக்கு அபிஷேக் மத்தியான வகுப்புகளுக்கு வராமே 'கட்' பண்ணியிருக்கான். அவன் கேரக்டர் சரியில்லாத பையன். அவன்தான் அந்தப் பெண்ணை ஏதாவது பண்ணியிருக்கணும். என்னோட இந்த சந்தேகத்தை சி.ஈ.ஓ.வுக்கு அனுப்ப நீங்க நடவடிக்கை எடுக்கணும்'ன்னு பாரிஜாதம் என்கிட்டே கேட்டுகிட்டாங்க."

"நீங்க என்ன சொன்னீங்க?"

" 'அந்தப் பையன் அபிஷேக்தான் திரிபுரசுந்தரியின் மரணத்துக்கு காரணம் என்பதற்கான ஆதாரம் ஏதாவது உங்ககிட்டே இருக்கான்'னு கேட்டேன். அதுக்கு அவங்க 'ஆதாரம் எதுவும் இல்லை. அபிஷேக்கை போலீஸ் கைது பண்ணி விசாரிக்க வேண்டிய விதத்துல விசாரிச்சா உண்மை வெளியே வரும்'ன்னு சொன்னாங்க."

"ஆனா நீங்க மறுத்துட்டீங்க?"

"ஆமா...."

"அதுக்குப் பிறகு பாரிஜாதம் திரிபுர சுந்தரியின் மரணத்துக்குப் பின்னாடி இருக்கிற உண்மையை வெளியே கொண்டு வர்றதுக்காக மறைமுகமாய் முயற்சி பண்ணியிருக்காங்க. அதனோட ரீயாக்ஷன்தான் சாலை விபத்தில் அவர் மரணம்!"

"மே... பி... ஸார்."

"அந்தப் பையன் அபிஷேக்கோட அப்பா பேர் என்ன?"

"சபரீஸ்வரன். ஷேர் மார்க்கெட்டிங்கில் மிகப் பெரிய புள்ளி."

"இப்ப அவர் எங்கே இருக்கார்?"

"மகன் அபிஷேக்கோடு வெளிநாட்டுக்குப் போய் செட்டிலாயிட்டார்."

இன்ஸ்பெக்டர் கதிர் பெருமூச்சொன்றை வெளியேற்றியபடி தன்னுடைய இரண்டு தோள்களையும் ஜெர்க் செய்தார்.

"இவ்வளவு விஷயங்கள் நடந்து இருக்கு. ஒரு ஸ்கூலுக்கு கரஸ்பாண்டென்ட்டாய் இருக்கிற உங்களுக்கு போலீஸுக்குப் போகணும்ங்கிற நினைப்புகூட வரலையா...?"

"போலீஸுக்கு நான் எப்படி போக முடியும் ஸார்? எல்லாத்துக்கும் மேலே மந்திரி நவநீதகிருஷ்ணன் இருக்கும் போது நான் பலமாய் கூட மூச்சு விட முடியாதே...!"

"இட்ஸ் ஓ.கே... உங்க நிலைமை எனக்குப் புரியுது. பாரிஜாதத்தோட கணவர் ஜம்புநாதனுக்கு இந்த விஷயமெல்லாம் தெரியுமா?"

"தெரியும்! நீங்க அவரை என்கொயர் பண்ணிட்டு அவர் வீட்டு வாசற்படியை விட்டு இறங்கினதுமே அவர் எனக்கு போன் செய்து நீங்க வந்து விசாரிச்சுட்டுப் போன விபரங்களை சொன்னார். இதனால ஏதாவது பிரச்னைகள் வருமோன்னு கூட கவலைப்பட்டார். நான் அவர்க்கு தைரியம் சொன்னேன்."

"இப்ப ஓரளவுக்கு எல்லாமே புரியுது. இன்ஸ்பெக்டர் குணசேகரனும், டாக்டர் சாமுவேலும் தன்னுடைய செல்போனிக் கான்வர்சேஷனில் உபயோகப்படுத்திய 'திரிபுரம்' என்கிற வார்த்தை அந்த மாணவி திரிபுரசுந்தரியைக் குறிப்பது இல்லையா?"

"ஆமா... ஸார்! திரிபுரசுந்தரிக்கு வேண்டியவங்க யாரோ இந்த அஞ்சு வருஷகாலமும் பொறுமையாய் இருந்துட்டு இப்பத்தான் கையில் ஆயுதத்தை எடுத்து இருக்காங்க... இன்ஸ்பெக்டர் குணசேகரன், டாக்டர் சாமுவேல், அமைச்சர் நவநீதகிருஷ்ணன்னு மூணு பேரையும் திட்டம் போட்டு தீர்த்துக் கட்டியிருக்காங்க!"

"அவங்க யாராயிருக்கும்ன்னு நினைக்கறீங்க?"

"தெரியலை...! திரிபுரசுந்தரிக்கு அப்பா கிடையாது. அம்மா மட்டும்தான். சொந்தபந்தம் எதுவும் கிடையாது."

"திரிபுரசுந்தரியோட அம்மா பேரு என்ன?"

"அனுசூயா...!"

"இப்ப அவங்க எங்கே?"

"பொண்ணு இறந்த ஆறுமாசத்துக்குள்ளே அந்த அம்மா இந்த ஊர்ல இருக்கப் பிடிக்காமே வேற ஏதோ ஊர்க்குப் போயிட்டதாய் கேள்விப்பட்டேன். இப்போ அவங்க எந்த ஊர்ல, எப்படி இருக்காங்கன்னு எனக்குத் தெரியாது!"

கதிர் எழுந்தார்.

"நீங்க கொடுத்த தகவல்களுக்கு ரொம்பவும் நன்றி மேடம்.

இனி சட்டம் தன்னோட வேலையை ஆரம்பிக்கும். கொலையாளியை கூடிய சீக்கிரம் நெருங்கும்"

.....

இணைய தளங்களைக் கையாள்பவர்கள் சிறிது புத்திசாலித்தனத்தோடும் உணர்ச்சிவசப்படாதவர்களாகவும் இருந்தாலே போதும், பெரும்பாலான சைபர் குற்றங்களைத் தவிர்த்து விடலாம். பெரிய தொகை உங்களுக்குப் பரிசாக விழுந்து இருக்கிறது. இதை க்ளிக் செய்யுங்கள் என்ற அறிவிப்பு உங்களுடைய இணையதள பக்கங்களில்

பளிச்சிடும்போது அதை அலட்சியம் செய்ய வேண்டும். அதே போல் பாதுகாப்பான 'http' பக்கங்களில் மட்டுமே நடமாட வேண்டும். 'அன் செக்யூர்ட் வெப்சைட்' என்று நம் கம்ப்யூட்டர் நம்மை எச்சரிக்கும் போது அந்த எச்சரிக்கைக்கு நாம் கீழ்ப்படிய வேண்டியது அதி புத்திசாலித்தனம்.



## 15

மதுரவாயல். ஜோதி ஹாஸ்பிடல்.

ஐந்துமணி நேரத்திற்குப் பிறகு சுய உணர்வுக்கு திரும்பியிருந்தார் அஸிஸ்டண்ட் கமிஷனர் ஜெயச்சந்திரன். தலையிலும், வலதுகையின் முழங்கையிலும் கனமான பாண்டேஜ் கட்டு. நெற்றியிலும் இடது கன்னத்திலும் கூட்டல் குறி போட்ட மாதிரி ப்ளாஸ்திரிகள்.

ஜெயச்சந்திரன் கட்டிலில் சாய்ந்து கொண்டு தன்னைச் சுற்றிலும் நின்றிருந்த உயர் அதிகாரிகள் கேட்ட கேள்விகளுக்கு பலஹீனமான குரலில் பதில் சொல்லிக் கொண்டிருந்தார்.

"நான் சென்னை புறப்பட்டு வர்றதுக்காக கோவை ஏர்போர்ட்டுக்கு டாக்ஸியில் புறப்பட்டு வரும்போதுதான் நான் கடத்தப்பட்டேன்.

கடத்தலுக்கு அந்த டாக்ஸி டிரைவரும் உடந்தை."

போலீஸ் கமிஷனர் குகநேசன் "அந்த டிரைவர் யார்?"

"தெரியலை ஸார்...! நான் ஹோட்டலில் இருந்து ஏர்போர்ட் போக புக் பண்ணியிருந்த டாக்ஸி சரியான நேரத்துக்கு வராததால நான் ஹோட்டலுக்கு வெளியே வந்து அந்த வழியாய்ப் போன டாக்ஸியை

நிறுத்தி ஏர்போர்ட் போனேன். டாக்ஸி பீளமேட்டைத் தாண்டி கொடிசியாவை நெருங்கும் போதுதான் டாக்ஸி ஒரு ஓரமாய் நின்றது. சாலையோரமாய் நின்றிருந்த இரண்டு பேர் தடாலடியாய் டாக்ஸிக்குள் ஏறினார்கள். அவர்கள் யார் என்று நான் அடையாளம் காண்பதற்குள் என் புஜத்தில் ஒரு ஊசி சுருக்கென்று குத்தப்பட, அடுத்த பத்து விநாடிகளில் நான் மயக்கமாவது எனக்கே தெரிந்தது. மறுபடியும் எனக்கு சுயஉணர்வு வந்தப்ப ஏதோ ஒரு அறையில் ஒரு நாற்காலியோடு சேர்த்து என்னைக் கட்டிப் போட்டு இருந்தாங்க. அறையில் அரைகுறை வெளிச்சம். எனக்கும் பின்னாடி ரெண்டு பேர் நின்னுகிட்டு மிரட்டற தொனியில் பேசினாங்க. 'அஞ்சு வருஷத்துக்கு முன்னாடி திரிபுரசுந்தரி என்கிற ஒரு மலர் மொட்டின் வாழ்க்கையைக் கருக வைத்தவர்கள் யார் யார் என்பதைப் பட்டியல் போட்டுக் கொண்டு களையெடுத்து வருகிறோம். அது சம்பந்தமாய் போலீஸ் துறை விசாரணை என்ற பெயரில் நாங்கள் யார் என்பதைக் கண்டுபிடிக்க முயற்சி செய்யக்கூடாது. மீறி முயற்சி செய்தால் அந்த விசாரணை அதிகாரிகளையும் போட்டுத் தள்ளுவோம். இந்த எச்சரிக்கை உன் மூலமாக போலீஸ் டிபார்ட்மெண்ட்டுக்கு செல்ல வேண்டும் என்பதற்காக உன்னை இப்போது உயிரோடு வெளியே விடுகிறோம்' என்று சொல்லி, என்னுடைய கண்களைக் கட்டி, மறுபடியும் ஒரு மயக்க ஊசியைப் போட்டு என்னை சுயஉணர்வு இழக்க வைத்து, வானகரம் பகுதியில் கொண்டு வந்து போட்டு விட்டு போய்விட்டார்கள்."

ஜெயச்சந்திரன் ஒரு பெருமூச்சோடு சொல்லி முடிக்க போலீஸ் கமிஷனர் குகநேசன் தனக்கு அருகே நின்றிருந்த டெப்டி கமிஷனரைப் பார்த்தார்.

"போலீஸ் இந்த திரிபுரசுந்தரி விவகாரத்தில்

மூக்கை நுழைக்கக்கூடாதுன்னு கொலையாளிகள் நினைக்கிறாங்க?"

"எஸ்... ஸார்! இன்ஸ்பெக்டர் கதிர் பூவாணி கிராமத்துக்குப் போய் சாலை விபத்தில் இறந்து போன பாரிஜாதத்தின் கணவர் ஜம்புநாதனையும் காஞ்சிபுரம் ராஜாம்மாள் மெட்ரிகுலேசன் பள்ளியின் கரஸ்பாண்டெண்ட் குமுதாவையும் மீட் பண்ணி பேசி, நிறைய இன்ஃபர்மேஷன்களை 'கேதர்' பணணிக் கொண்டு வந்து இருக்கிறார். அந்த விஷயங்களை அடிப்படையாக வைத்துக் கொண்டு பார்க்கும் போது ஜம்புநாதனும், குமுதாவும் கூட அந்தச் கொலையாளிகளால் மிரட்டப்பட்டு வந்து இருக்கிறார்கள். கொலையாளிகள் புத்திசாலிகள். திரிபுரசுந்தரி பாலியல் பலாத்காரம் செய்யப்பட்டு கொலையுண்டாள் என்கிற விஷயத்துக்காக உடனடியாக ஆத்திரப்படாமல், உணர்ச்சி வசப்படாமல் ஐந்தாண்டு காலம் அவகாசம் எடுத்துக் கொண்டு இன்ஸ்பெக்டர் குணசேகரனையும், டாக்டர் சாமுவேலையும், அமைச்சர் நவநீதகிருஷ்ணனையும் தீர்த்துக் கட்டியிருக்கிறார்கள்."

டெப்டி போலீஸ் கமிஷனர் சொல்லச் சொல்ல இன்னொரு உயர் அதிகாரி குறுக்கிட்டார்.

"ஸார்! இந்த இடத்தில் எனக்கொரு சந்தேகம்!"

"என்ன?"

"பதினைந்து வயது சிறுமியான திரிபுரசுந்தரியை உண்மையிலேயே பாலியல் பலாத்காரம் செய்து அவளைக் கொலை செய்தது அதே பள்ளியில் ப்ளஸ்-டூ படித்துக் கொண்டிருந்த அபிஷேக் என்கிற ஒரு பள்ளி மாணவன். அபிஷேக்கின் தந்தை சபரீஸ்வரன் மகனை அந்தப் பிரச்னையிலிருந்து காப்பாற்ற பணத்தை தண்ணீராய் செலவழித்து குணசேகரன், சாமுவேல் மற்றும் நவநீதகிருஷ்ணனை விலைக்கு வாங்கியிருக்கிறார். ஆனால் உண்மையில் கொலை செய்யப்பட

வேண்டியவர்கள் அபிஷேக்கும், சபரீஸ்வரனும்தான். அவர்களை ஏன் கொலையாளிகள் விட்டு வைத்து இருக்கிறார்கள்?"

கதிர் குறுக்கிட்டு சொன்னார்:

"அபிஷேக்கும் அவனுடைய அப்பா சபரீஸ்வரனும் இப்போது இந்தியாவிலேயே இல்லை. அவர்கள் யு.எஸ். போய் க்ரீன் கார்டு வாங்கிக்கொண்டு அங்கேயே செட்டிலாகிவிட்டார்கள்."

"இருந்தாலும் இந்த இடம் இடிக்கிறது மிஸ்டர் கதிர்! நான் என்னோட கெஸ் ஒர்க்கைச் சொல்லட்டுமா?"

"சொல்லுங்க ஸார்."

"குணசேகரன், சாமுவேல், நவநீதகிருஷ்ணன் - இந்த மூணு பேரோட வாழ்க்கைக்கும் முற்றுப்புள்ளி வெச்சது ஏன் சபரீஸ்வரனாய் இருக்கக் கூடாது?"

"மோட்டிவேஷன்?"

"அந்த மூணுபேர்களாலே என்னிக்காவது ஒரு நாள் திரிபுரசுந்தரியின் மரணத்துக்குக் காரணம் தன்னுடைய மகன் அபிஷேக்தான் என்கிற உண்மை வெளியே வந்துவிடும் என்கிற பயம்தான் மோட்டிவேஷன்."

கமிஷனர் குகநேசன் தலையசைத்தார். "ஹி மே பி கரெக்ட் மிஸ்டர் கதிர்... இனி இந்தக் கேஸை நாம் அந்த ஆங்கிளில் இருந்துதான் பார்க்கணும்..."

"எஸ்...ஸார்" என்றார் கதிர்.

.....

எதிர்கால இண்டர்நெட் பயன்பாடு எப்படி இருக்கும் என்கிற கேள்விக்கு அமெரிக்காவின் பிரபல ஐ.டி. நிறுவனம் ஒன்று இப்படியொரு கருத்தை வெளியிட்டிருந்தது.

நீ இன்றி நான் இல்லை

என்பதில் தொடங்கிய இணையதளம்
நீயா... நானா
என்பதில் ஆரம்பித்து
ஒரு யுத்தமாக மாறும்
அதில் அநேகமாய்
நாம் தோற்றுப் போவோம்.



16

ஒரு வாரம் கழித்து - ஒரு முன்னிரவு நேரம். சென்னையின் புறநகர்ப்பகுதி.

முதல் அமைச்சரின் பண்ணை வீட்டு வரவேற்பறையில் காத்திருந்த டி.ஜி.பி. நம்பெருமாளை முதலமைச்சரின் பி.ஏ. நெருங்கினார்.

"ஸார்! சி.எம். உங்களைக் கூப்பிடறார்."

நம்பெருமாள் எழுந்து வரவேற்பறையின் கோடியில் இருந்த முதலமைச்சர் பொன்னம்பலம் அறையை நெருங்கி கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே போனார்.

அறுபது வயதின் விளிம்பில் இருந்த பொன்னம்பலம் ஒரு ஃபைலைப் புரட்டியபடி தெரிய, நம்பெருமாள் ஒரு சல்யூட்டைக் கொடுத்துவிட்டு நிற்கவும் - பொன்னம்பலம் சிரித்தார்.

"உனக்கு நான் எத்தனை வாட்டி சொல்லி யிருக்கேன். தனியறையில் நீயும் நானும் இருக்கும்போது இந்த சல்யூட் அடிக்கிற மரியாதையெல்லாம் வேண்டாம்ன்னு...!"

"ஸாரி... பொன்னம்பலம்! நீயும் நானும் பால்ய

காலத்து சிநேகிதர்கள் என்கிற விஷயம் எனக்கு அடிக்கடி மறந்து போயிடறது."

"இனிமே நீ மறக்கக் கூடாது. என்னோட ரூம்ல வேற யாராவது இருந்தா மட்டும் சல்யூட் அடி..." சொன்னவர் பார்த்துக் கொண்டு இருந்த ஃபைலை மூடியபடி தன்னுடைய வலது கண்ணைச் சிமிட்டினார்.

"என்ன நம்பெருமாள்! நாம போட்ட திட்டப்படி எல்லாமே நல்லபடியாய் முடிஞ்சுது போலிருக்கு..?"

நம்பெருமாள் வாய்விட்டு சிரித்துக் கொண்டே, அவர்க்கு எதிரேயிருந்த நாற்காலிக்கு சாய்ந்தார்.

"ரொம்ப ரொம்ப நல்லான்னு சொல்லு!"

"போலீஸ் டிபார்ட்மெண்ட்ல... யாருக்கும் எந்த சந்தேகமும் வரலையே?"

"எப்படி வரும் பொன்னம்பலம்? திட்டம் போட்டுக் கொடுத்தது நீ. அதை அழகாய் ஸ்கெட்ச் பண்ணி செயல்படுத்தியது நான். ஒரு பிசிறு கூட இல்லாத திட்டம்...."

முதலமைச்சர் பொன்னம்பலம் கோபத்தில் முகம் இறுகி மேஜையைக் குத்தினார்... "அந்த நன்றி கெட்ட நாய் நவநீதகிருஷ்ணன் ஒரு சாதாரண வட்டச் செயலாளராய் இருந்தவன். அவனை மாவட்ட செயலாளராக்கி, எம்.எல்.ஏ.வாக்கி அதுவும் போதாதுன்னு மந்திரியாக்கி அழகு பார்த்தேன். அவன் என்னடான்னா 'அடுத்த சி.எம். நான்தான்'னு சொல்லிகிட்டு அண்டர்க்ரௌண்ட் வேலை பார்த்து இருக்கான். அதுக்கு அப்புறமும் அந்த வெறிநாயை விட்டு வைக்கலாமா....? அதனால்தான் அஞ்சு வருஷத்துக்கு முந்தி காஞ்சிபுரம் ராஜாம்மாள் மெட்ரிகுலேஷன் ஸ்கூலில் திரிபுரசுந்தரி என்கிற மாணவியின் பாலியல் பலாத்கார மேட்டரை தூசி

தட்டி எடுத்து அந்தப் பொண்ணுக்கு எதிராகவும், சட்டத்துக்கு எதிராகவும் செயல்பட்ட குணசேகரனையும், டாக்டர் சாமுவேலையும், நவநீதகிருஷ்ணனையும் ஒரே வாரத்துக்குள்ளே அடுத்தடுத்து போட்டுத்தள்ள ஏற்பாடு பண்ணினேன். நீயும் உதவி பண்ணினே!"

நம்பெருமாள் சிரித்தார்.

"நான் எங்கே உதவி பண்ணினேன்? நீ இந்த மாநிலத்துக்கு சி.எம். எல்லாத்தையும் உன்னோட கண் அசைவாலே நடத்தி முடிச்சே! நான் யூனிஃபார்மைப் போட்டுகிட்டு வேடிக்கை பார்த்துட்டு இருந்தேன்."

"இனிமேத்தான் உனக்கு வேலை இருக்கு.... நம்பெருமாள்"

"நீ என்ன சொல்றே?"

"குணசேகரன், சாமுவேல், நவநீதகிருஷ்ணன் - இந்த மூன்று பேர்களையும் கொலை பண்ணின கொலையாட்கள் யார்ன்னு நீ தினமும் போலீஸ்கமிஷனர் குகநேசனைப் போட்டுக் குடையணும். அவர் தனக்குக் கீழே இருக்கிற மத்த ஆபீஸர்களை விரட்டுவார்... இந்தப் பரபரப்பு எப்பவுமே இருந்தால்தான் நவநீதகிருஷ்ணன் கொலை செய்யப்பட்ட விஷயத்துல யார்க்கும் எந்தவிதமான சந்தேகமும் வராது."

"ஒரு டி.ஜி.பி.யாய் இருந்துகிட்டு அந்த வேலையைக் கூட நான் பார்க்கலைன்னா எப்படி பொன்னம்பலம்..?"

"சரி... இந்த சந்தோஷத்தைக் கொண்டாட வேண்டாமா?"

"கண்டிப்பாய்!"

"போய் செல்ஃபைத் திறந்து அந்த ஷீவாஸ் ரீகலோட கழுத்தைப் பிடிச்சு தூக்கிட்டு வா... ஆளுக்கு

ஒரு ஸ்மாலும் ஒரு லார்ஜும் போடுவோம்."

நம்பெருமாள் எழுந்துபோய் அறையின் சுவர் அலமாரியைத் திறந்து அந்தக் கருஞ்சிவப்பு விஸ்கி பாட்டிலை எடுத்து வந்தார். மேஜையின் ஒரு ஓரத்தில் வைக்கப்பட்டிருந்த இரண்டு புனல் வடிவ டம்ளர்களில் ஊற்றினார். உயர்தர சோடாவை நுரை பொங்க கலந்தார்.

இருவரும் டம்ளர்களைக் கையில் எடுத்துக் கொண்டு சியர்ஸ் சொல்லித் துளித்துளியாய் சப்பி வயிற்றுக்குள் இறக்கினார்கள்.

அடுத்த ஒரு மணி நேரத்தில் பாட்டிலில் இருந்த பாதி ஷீவாஸ் ரீகல் காணாமல் போயிருக்க - நம்பெருமாள் எழுந்தார்.

"பொன்னம்பலம்! நான் கிளம்பறேன். மணி பதினொன்று. இதுதான் லிமிட். இதுக்கு மேல ஒரு சிப் அதிகமாய் போனாலும் என்னால காரை ட்ரைவ் பண்ணமுடியாது."

"சரி...! இப்ப கிளம்பு. நாளைக்கு கொஞ்சம் சீக்கிரமாவே வா.... வேற ப்ராண்டை ருசி பார்க்கலாம்... பீஜிங் ரெட் ஒயின்."

"ஏழுமணிக்கே வந்துடறேன்!" நம் பெருமாள் சொல்லிவிட்டு தலைக்கு ஏறாத போதையோடு கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார்.

போர்டிகோவில் காத்திருந்த அவருடைய ஜாக்வார் காரின் ட்ரைவிங் இருக்கையை ஆக்ரமித்தார்.

கார் நகர்ந்து பண்ணை வீட்டைக் கடந்து பிரதான சாலைக்கு வந்ததும் காதுக்கு ரிஸீவர் பட்டனை மாட்டிக் கொண்டு செல்போனை எடுத்து ஒரு எண்ணைத் தொடர்பு கொண்டார். மறுமுனையில் ரிங் போய் ரிஸீவர் எடுக்கப்பட்டதும் நம்பெருமாள்

மெள்ள குரல் கொடுத்தார்.

"டாக்டர் லட்சுமிகாந்தன்!"

மறுமுனையில் முதலமைச்சர் பொன்னம்பலத்தின் குடும்ப டாக்டரான லட்சுமிகாந்தன் பேசினார்.

"என்ன... நம்பெருமாள்! பார்ட்டி முடிஞ்சு வெளியே வந்துட்டீங்க போலிருக்கு!"

"இப்பத்தான் வந்தேன்!"

"என்னாச்சு....?"

"நீங்க குடுத்த ந்யூரோ டீ ஆக்டிவிடி மாத்திரையை பொன்னம்பலம் சாப்பிட்ட விஸ்கியில் கலந்துட்டேன்...!"

"குட்.... இது போதும்...! இனி பொன்னம்பலத்துக்கு ஆயுள் ஆறே மாதம்தான்... அடுத்த மாசத்தில் இருந்தே அதற்கான அறிகுறிகள் அவர்கிட்டே தெரிய ஆரம்பிக்கும்.... ஆறாவது மாசம் சென்ட்ரல் நெர்வஸ் சிஸ்டம் முடங்கும் போது தமிழக முதல் அமைச்சர் பொன்னம்பலம் சிகிச்சை பலனின்றி மரணம் என்கிற செய்தி எல்லா டி.வி. சானல்களிலும் ஃப்ளாஷ் நியூஸாய் போய்கிட்டு இருக்கும்..."

"டா..டாக்டர்!" குரலை இழுத்தார் நம்பெருமாள்.

"என்ன? சொல்லுங்க!"

"நான் ஒரு போலீஸ் ஆபீஸர். நானே இப்படி ஒரு காரியத்தை செய்யலாமா...? ஐ....ஃபீல் கில்டி...!"

"நம்பெருமாள்! பொன்னம்பலத்தை உங்களைக் காட்டிலும் எனக்கு நல்லாவே தெரியும். அந்த ஆளோட ஃபேமிலி டாக்டர் நான். அவனுக்கு ஒரு ஆளைப் பிடிக்கலைன்னா அவனைத் தீர்த்துக் கட்டாமே விடமாட்டான். என்னைப் பொறுத்த வரைக்கும் ஹீ ஈஸ் ஏ சைக்கோ. ஒரு மனநோயாளி. அமைச்சர் நவநீதகிருஷ்ணனைப் பிடிக்காமே போன மாதிரி என்னிக்காவது ஒரு நாள் உங்களையும்

என்னையும் அந்த ஆளுக்குப் பிடிக்காமே போகலாம். அந்த சமயத்துல உங்களையும் என்னையும் காப்பாற்ற யாரும் வரமாட்டாங்க..! அவர் கூட உட்கார்ந்து லிக்கர் சாப்பிடற நபர் நீங்க ஒருத்தர்தான். அதனால்தான் அந்த ந்யூரோ டீ ஆக்டிவிடி மாத்திரையைக் குடுத்தேன். நீங்களும் அவர் சாப்பிட்ட லிக்கர்ல கலந்துட்டீங்க. இது ஒரு சுப்ரீம் கோர்ட்டின் தீர்ப்புக்கு சமமானது. வீட்டுக்குப் போய் சந்தோஷமாய் தூங்குங்க. குட் நைட்"

மறுமுனையில் டாக்டர் லட்சுமிகாந்தன் செல்போனை அணைத்துவிட, டி.ஜி.பி. நம்பெருமாள் லேசான மனசோடு காரின் மியூஸிக் ஆடியோ பட்டனைத் தட்டி விட்டு, ஆக்ஸிலேட்டரை உற்சாகமாய் மிதித்து போக்குவரத்து இல்லாத சாலையில் காரை பறக்க வைத்தார்.

ஆடியோ காஸட் அந்தப் பழைய பாடலைப் பாடியது.

**"நிலை மாறும் உலகில்**

**நிலைக்கும் என்ற கனவில்....!"**



ஜீயே பப்ளிகேஷனுக்காக ஜீயே பப்ளிகேஷனில் அச்சிட்டு (பிரஸ்) வெளியிடுபவர் மற்றும் உரிமையாளர்

